# தாய்க்கிழவிகள் தளுக்கு



மைலாப்பூர்
டிரேடிங்-
கம்பெனி,
மைலாப்பூர்
மதராஸ்

# சிவலோக கிரிமினல் கேஸ்.

இது படிப்பவர்களுக்கு அறிவைப் பெருக்கி ஆனந்தத்தை நிறைத்து அஞ்ஞானத்தையோட்டி அன்பை வளர்க்கும் அரிய நூல். படிப்பவர்கள் இதுவரை இம்மாதிரியான விகடம் பார்த்ததில்லை என்பதோடு முற்றும் படிக்காமல் வேறு வேலைக்குப் பிரவேசிக்கவே மாட்டார்கள்.

இதில் சர்வசாஸ்திர, சர்வ சமய சம்மதமாக ஞான விஷயங்களை விகட வகையால் விளக்கியிருப்பதோடு தெய்வம் ஒன்றே யென்னும் வாதமும், சிவம் ஞான சாத்திரத்தை வைத்திய பாகமாகப் பேசுவதும், சிவம் ட்ராமா நடத்தினரென்பதும் அதன் அரிய பெரிய ரகசியங்களும், சிவஞான முனிவர் வேதாந்தஷாப் வைத்திருந்தாரென்பதும், தாயுமானவர் முதலியோர் சாக்ஷி பகர்வதும் மாயாவாத பஜார் முதலிய கடைபேதங்கூறுவதும் சிவம் அநாதியென்பதும் சிவத்தின் குடும்பம் வியாபாரம் முதலியவைகளைப்பற்றி நடக்கும் தர்க்ககுதர்க்க விகடங்களும் மிக்க அருமையாக இருக்கும்

கேஸ்:---சிவம் ஒரு பெண்ணை அழைத்துக்கொண்டு போய்விட்டாரென்பதுதான். இதில் ஸ்ரீமத் பரஞ்சோதி முனிவர் பிடீஷன் செய்தாரென்பதும் கமிஷனர் உபாசனாமூர்த்தியாகவும் வழிகாட்டி ஆசாரியாகவும், கானிஷ்டபில்கள் பஞ்சேந்திரியங்களாகவும், இனிஸ்பெக்டர் மனதாகவும் உவமித்து அவர்களால் சிவத்தை 1-வேதாரண்யம், 2-சராசரப்பட்டி பலசமய நாடகம், 3-நாசிமோடு சிங்கு வங்கையர் வீடு, 4-விண்ணகரம் மேனத்தூர் அண்ணாவையர் வீடு, 5-திக்குப் பாலவனம் முச்சந்தி வீதி ஜோதியையர் வீடு, 6-கருங்கற்பத்துரை குன்று வெளிக்கோட்டை, 7-மேலூர் பேரம்பலப்பட்டி இவ்விடங்களிற் றேடும் அருமையும், இடையில் பஞ்சேந்திரிய தேவர்கள் சேர்ந்தொழிவதும் கடைசியில் 8-பாழூர் முத்திமடத்தில் மானசப்பட்டி யோகநாதம் பிள்ளை, இனிஸ்பெக்டர் கண்டு அரஸ்டு செய்வதும் மிக்க அருமையாயிருக்கும். இதன்றி இதில் அநேக ஞான விஷயங்களை விகடமாக வரைந்துள்ளன.

விலை அணா 12.

---

# தாய்க்கிழவிகள் தளுக்கு.

சேழுமணவை சித்ரகவி
தேவேந்திர நாத பண்டிதர்
எழுதியது



இரண்டாம் பதிப்பு.



சென்னை, மயிலை :
மயிலாப்பூர் டிரேடிங் கம்பெனியார்
பிரசுரித்தது.

சென்னை: சிவகாமி விலாச அச்சுக்கூடம்

ரிஜிஸ்தர் செய்தது] 1922 [அணா 8.

# முகவுரை.

இவ்விந்து தேசங்கண் சிறந்தோங்கி விளங்கா நின்ற சென்னைமுதற் பல பிரதேசங்களில் வசித்துள்ள விலைமாதர்கட்குரிய தலைவிகளை ஏற்கெனவே தாய்க்கிழவிகளென்பது சகசமாயிருந்த போதிலும், அத்தாய்க்கிழவிகள் செய்யும்படியான தளுக்குகளோ இவ்விதமென எடுத்துரைப்பதற்கெவர்கட்கு நாவெழும். அத்தகைய சீமாட்டிகள் ஆடவரைமயக்கி அவர்களது கைப்பொருளையபகரிக்க முயல்வதோ சாக்கடைத்தவளையையடிக்க ஆறுமாதம் வெளிகூடாரம் போட்டுக் காத்ததுபோல் எந்தக்காலத்தில் எந்த நேரத்தில் எவரிடத்தில் எப்பொருள் கைக்குச் சிக்குமோ அப்பொழுததனை அக்ஷணமே தங்கள் கைப்பற்ற எண்ணமுற்றெதிர்பார்த்திருக்கும் எந்திழைமார் பார்த்தாலும் பஞ்சை, பாய்ந்தாலும்புலி, ஏழைக்குடித்தனங்கட் கெமனெனவுதித்து எத்தேசகாலமும் விஸ்தாரமாய் நத்தைவயற்றில் முத்துகள்போலும், டுப்பாக்கிவயற்றிற் பீரங்கிகள்போலும், பருவதம் வயற்றில் மரகதம் பிறந்தாற்போலும், ஒவ்வொருவரும் செவ்விதாயுதித்து வளர்ந்தோங்கி மதனரதிக் கொப்பனையாய் வசீகரமுடைய வதனங்களையுடைத்தாகி வசிப்பதோடு மற்றுஞ் சிலர் இழிகுலத்திலுதித்த இளமைப்பருவப் பாலிகைகளை விலக்கிவாங்கியும் வளர்த்து குளவிக்கீடத்தைத் தன்னுருவாக்குதல்போல தத்தங்குணக்குறிகளை ஒன்றுவிடாமற் போதித்து உலகினைமயக்கு மாயமருந்திட்டினை ஒவ்வொருவருக்கும் உள்ளுக்கேற்றி அவர்களாற் சீவிக்கும் எத்தனங்களை எத்தன்மையோரும் கருதி இளமைப்பருவத்திலேயே தங்கள் வைப்புக்காரர்களாற் சிகிர்தை முதலிய சிற்சில சரசங்களைச் செய்யவிடுத்து அவர்களையும் கண்டவரிடம் திண்டிக்கும் சிற்றுண்டிகளுக்கென்று முதவும்படி சண்டித்தனமாய்க் காசறுக்குந் தந்திரோபாயங்களைத் தக்கபடி கற்பித்து வந்த

தன் பின்னும் பருவபக்குவமாகுங் காலத்தில் தாங்கள் தயார்படுத்தியுள்ள தாரதம்மியத்தைக்கொண்டு தாசிவேசிகளெனவுண்டுடுத்தியலங்கரித்துக்கொண்டு இந்நூலிற்கூறிய தாய்க்கிழவி தளுக்குதங்கத்துக்குப் போதிக்கும் கற்பனைக் கண்ணிகள்போல காசறுப்பாதாரமாகிய நடைநொடி பாவனையால் நாடோறும் எந்நாட்டிலும் நன்குமதிக்க மேனிமினுக்கி தளுக்குகள் தட்டுவாணிபஞ்செய்யுந் தலைமகள் சமர்த்துக்கு மெச்சவும் இந்நூலைத் தசக்கிமசக்கி தட்டிப்பறிக்கும் தாய்க்கிழவிகள் தளுக்கெனபபெயர் வகுக்கலாயிற்றும்.

அன்றியும் பரம்பரைத்தாசிகள் இவ்விதமாயிருந்தபோதினும், பஞ்சத்தின் தாசிகளோ கிஞ்சித்துநாள் வாழ்ந்து அதன்பின்கெட்டு பலபல விடங்களிலுந் தத்திக்கெட்டுத் தடுமாறி தாசி வேசிகளிடம் தம் துணைக்கொரு தாய்க்கிழவியை ஏற்படுத்தக்கொண்டு அவர்கள் செய்யுந் தளுக்கு சளுக்குகளோ சொல்ல முடியாமல் தனக்கிசைந்த வைப்பாளர்களை கைக்குள்போட்டுக் கவந்தமா யாக்கி காசறுக்கும் நாசக்காலிகள் கணக்கற்றவர்களாய்ச் சூப்புக்காட்டிச் சுயமானதாசிகளெனப் பலர் மதிக்கும்படி விசிறி விளையாடுவதுமுண்டு. அதிலும் சிலர் குடிவிஷயங்களிற் கொண்டாட்டமாய்க் கொடுப்பவரிடம் கூடி அவர்களின்கொம்பையை யழியச்செய்து குரூரங்களை விளைவிக்கும் கொள்கையால் கூத்திக்கள்ளர்களை ஏமாத்தி எத்திப்பிடுங்கி ஏங்கியழச்செய்வது என்ன கொடுமை. இதிலும் விசேஷம், தாசிவேசிகளைவிட தட்டு வாணிச்சிகள் தான்றோன்றிகளாய் அகப்பட்டவர்களைத் திகைப்புறறழ சிக்கெனத்தேடும் துடுக்கிகள் எங்கினுஞ் சிதருண்டிருப்பது திண்ணம்.

செ. சி. தேவேந்திரநாத பண்டிதர்.

——·——

உ

சிவமயம்.

# தாய்க்கிழவிகள் தளுக்கு.

காப்பு - வெண்பா.

சளுக்குடனே வந்தவரைச் சற்றுதாய்க் கிழவிகள்
தளுக்கதுவே செய்தவளுஞ் சந்தித்தே—அளுக்குடனோர்
தட்டிப் பணம்பறிக்குந் தன்கதைக் கைங்கரன் காப்பாய்ச்
சூட்டித் தொழ வெவர்க்குந் துதி.

சாரதாம்பாள் துதி.

மறைநான்கே யோருருவாய் வந்துதித்த தாமரைப்பூ
நிறைவாழ்வே பேரறிவாய் நிற்பவளே—குறையறவே
எக்காலு மேபஜித்தே யெழிற்சார தாம்பாளை
முக்காலுமே துதிப்பேன் முன்.

அவையடக்கம்.

ஒழுக்கமுள வாணர்கள்முன் னொன்றறியான்செய்திடுநூல்
வழுக்களுள தேலறிஞர் மன்னித்தே—இழுக்குரையார்
எல்லவரும் நல்லவரா யென்னெஞ்சி னிற்றுதிக்க
வல்லவரொன் சொல்லையுணர் வார்.

நூலாசிரியன் பெயர்.

நலமிகும் விஸ்வராயன் கோத்திரமுதி
தலமுறை வீராசாமி தவத்துயர்
வலவனற் செழுமணவைச் சித்ரக்கவி
திலகன் தேவேந்திரநா திறைவனே.

# முதல் அத்தியாயம்.

இஞ்ஞாலங்கண் வெகு ஜாலங்களைச் செய்து வாலப்பருவத்தினரை சாலவும் வஞ்சித்து அவர்கள் மதியை மயக்கி மாருட்டமாக்கி வைப்புசொப்பனைத் தும் மருவத்தரும்படி மாயமருந்திட்டு தங்கள் கைவ சப்படுத்தி வந்தமட்டும் சந்ததம்பறிக்கும் வஞ்சி யாகிய நஞ்சினுங் கொடிய மாதர்களோ மகா காத கர்களாய் தலைவாசற்படியிற் றங்கியிருந்து முதற்றும் பூலம் முன்னேபிடிக்கும் மோசக்காரிகளாய் நேசர்க் குதவிடும் தாசிகள் செய்யுந் தாய்க்கிழவிகள் தளுக் கோ பகுசாதுரியமானவைகளெனப் பலரும் நம்புவ ராக. இத்தகைய நெடுங்கால கொடும் புலிகளோ பார்த்தாலும் பஞ்சையே பாய்ந்தாலும் சிங்கமே ஏழைக்குடித்தனங்கட்கு இயமனைத் தோன்றிடும் ஏந்திழைமார் எல்லவரும் நல்லவரே. ஆயினும் இவ் வஞ்சியர் ஆடவரை மயக்கும் வஞ்சிதநெஞ்சினராய் கண்டவர் மண்டையுண் மூளையைக் கொண்டமட்டு முறிஞ்சி யுண்டிடக் காரியஸ்தரேயன்றி விழலாண் டிச்சிகளல்ல. இவ்வித தாய்க்கிழவிகள் தளுக்கு பச் சைப் பாம்பாட்டுவர், பழஞ்சோற்றையூட்டுவர், தாது வையும் பார்ப்பர், மருந்தையுமளிப்பர், ஏனென்று கேட்கில் எட்டியுமுதைப்பர், இந்நஞ்சினுங்கொடிய நெஞ்சினையுடைய அஞ்சிடாவஞ்சகர் எங்கினுமப்ப டியே. "நன்மனமில்லா மாதரைப்படைத்து நமனையு

மென்செயப் படைத்தாய்'' என்பதுபோல, நாடோறு மிவர்கள் வீடேறிவரும் ஆடவரனைவருந் தேடரிய நாய்போல அனைத்தையுமீந்து தனத்தையுந் தோற்று கனத்தையும் கனத்தையும் இழந்து இனத்தை யும் விலகிட இம்மாதர்களிடும் சாதகமருந்திற் பாதகரழிந்து காதகராக முண்டைச்சிகளேற்றும் உண்டைமருந்தோ தொண்டைமட்டேறியதில் கொண்டவளை விட்டுத் தன்னண்டையில் திரிந்துழலச் செய்வது என்ன கொடுமை. இவ்விருத்தக் கிழவிக ளிப்படியிருக்க, அவர்களிடம் துப்பாக்கி வயற்றிற் பீரங்கியைப்போலும், நத்தைவயற்றில் முத்துகள் போலும், மரகதம் வயற்றில் பருவதம் போலும் பிறந்துள்ள மங்கையர் தங்கட்குப் பருவம் வராத முன் பத்துபேர் நத்துகையில், பருவம் வந்தபின் எத்தனைபேர்கள் நத்தாதிருப்பர். அவ்வாறுதித்த மாதினுக்குள்ள பெயரோவெனில், அலுக்குதாய், குலுக்குதாய், சளுக்குதாய், தளுக்குதாய், டங்க்டிங்க் ரவாமணி, மத்தாப்புசுந்தரம், மதனபூஷணம், மனோ ரஞ்சிதம், மன்மதபாணம், பரிபூரணமெனும் தஞ்சா வூர் தளுக்குதங்கமென்பவளுக்கு இத்தனை டைடி யிருக்கில் அவளது நடைநொடி பாவனை எவ்விதத் திருக்குமென்பதை செவ்விதாயவரவரே யறிந்து கொள்ளலாம். அத்தகைய யௌவனசீமாட்டியை வர்ணித்துரைக்க யாவராற்றரம். அவளுக்கித்தனை பெயர் ஏககாலத்தமைந்ததுமல்ல, அவரவர் அவரவர் அந்தந்த காலத்தில் குறிப்பிட்டுரைத்த பெயராகும் அதிலுங் கடைசியாய் தஞ்சாவூர் தளுக்கு தங்கமென்

பதே அவட்குச் சாஸ்வதமான பெயராதலால் அவள் சரித்திரத்தைச் சுருக்கமாய் இனி யெடுத்துரைக்கப் போகின்றமையால் முதலில் தன்னைப்பெற்ற தாய்க் கிழவியின் தளுக்கை ஏராளமாய் எல்லவர்க்கும் இனிப்புற விளக்கப்படுவதாம்.

இந்த தாய்க்கிழவியானவள் பரம்பரைத்தாசியு மல்ல, பஞ்சத்தின்ருசியுமல்ல. ஆதியில் சேணிச்சி வயற்றுதித்து வாணிச்சி கைவசம் விற்று, தட்டு வாணிச்சிக்கொப்பாய்த் திரிந்து தாசிகள் வீட்டைச் சார்ந்து இவளுமோர் வேசியுமானதால் இவளைப் பல ரும் போகம் சுந்தராங்கியென வழைக்கப்பட்டுள்ள வள். ஓர் வைரமுத்து முதலியென்னுஞ் சீமானை குத்தகையாய் வைத்துக்கொண்டு நெடுநாள் வசித் திருக்கையில், அவ்விருவர்க்கு முதித்த தஞ்சாவூர் தளுக்கு தங்கமென்பவளைத் சீர்திருத்தும் தளுக்கை யும், அவள் போதிக்கும் கற்பனைகளையும், மருந்தேற் றுமாயங்களையும், வச்சக்காரரை மயக்குவதையும், வந்த மட்டும் பணம்பறிப்பதையும், வஞ்சிக்கப் பொய்யுரைப்பதையும், மாளாக் கடன்படச்செய்வ தையும், மனைவி மைந்தரை மறக்கடிப்பதையும், மற்ற வர்களை நேசிப்பதையும், கைவரண்டபின் கால்தட்டு வதையும், கடன்காரர்வரத் துறத்துவதையும், கவ்வு நாய்போற் கடக்கச் செய்வதையும், காலைத்தழுவிற் கசந்துரைப்பதையும், அடுத்தடுத்தவரை வதைப்ப தையும், அனைவரையுமனுசரித்திருப்பதையும், தந்திர மாய்ப் பிறரைத் தழுவுதலையும், ஏற்கனவே மகா இன்பரசக்கியமாய் அன்புருகத் தென்புடனே தம்

புதல்வி புத்தியிற் பொருந்த வெகு வுருக்கமா யுரைக்க லாயினள்.

---

## தாய்க்கிழவி தளுக்குத் தங்கத்துக்குப் போதிக்கும் கற்பனைக் கண்ணிகள்.

---

1. கண்ணே என்கண்மணியே கட்டிக்கரும்பே தேனே
 சனிவாயான் சொல்வதைக்கேள் தங்கமே-பாடம்
 பண்ணைபடிப்பதுபோற் பழகி யெவர்களையும்
 பசப்பி மசக்கிவைப்பாய் தங்கமே,

2. இப்புவியோர் புகழச் செப்புச்சிலையெனவே
 என்றன் வயற்றுதித்த தங்கமே—எங்கும்
 ஒப்புனக்கிணையாகச் செப்பவெவராற்றரம்
 உண்டோடா சொல்லடிபெண் தங்கமே.

3. நிறைமஞ்சள் தரியடி நெற்றிக்கண்மையிட்டடி
 நிதஞ் சீவடி கூந்தலை தங்கமே.
 மரகதம்வயற்றினிற் பருவதம்பிறந்தாற்போல்
 மகிழ வளர்ந்தாயோடி தங்கமே.

4. பாதம்வரைசில்காப்பு பாவாடைசட்டியோர்
 பக்கமார் தெரியவே தங்கமே-மகமல்
 போதபட்டன்ஸ்ரவிகை போட்டுமாருக்கதலைப்
 புளகாங்கிதஞ் செய்யடி தங்கமே.

5. சுத்தமுத்தம்பார்த்துநீ சுருள்மடித்துத்தாம்பூலந்
 தொருசாய்க்கைபிடித்திரு தங்கமே-மெத்த
 எத்துவாரினோர்கள் எங்கிடக்கண்டுனை
 இனிக்க நாகரிகஞ்செய் தங்கமே.

6. விரும்பதூறுதரம்போய் வீதிவாசற்படியில்
மிகச் சிங்காரமாய்நிற்பாய் தங்கமே-அங்கே
மருவக்கணவான்களும் வரக்கதவின்மறைவில்
மதிமுகங்காட்டிநிற்பாய் தங்கமே.

7. மால்காட்டிமயல்காட்டி மைவிழிமுகங்காட்டி
மயங்க நகைகாட்டுவாய் தங்கமே-உந்தன்
சேல்காட்டி திரைகாட்டி சிற்றிடைகெஞ்சக்காட்டி
திரும்பி யுள்ளேநடடி தங்கமே.

8. வாதசீமான்களுக்கு மாயமருந்திட்டினே
மகிழ்வா யுள்ளுக்கேற்றிநீ தங்கமே-முற்றும்
சொந்தக்கணவனைப்போல் சொத்தனைத்துந்தர
சூதுவா தில்வாங்கடி தங்கமே.

9. பெருத்தபுட்டையன்வந்தால்பிரியமாயவனைச்சேர்
பின்னும் வேணதளிப்பான் தங்கமே-சற்றும்
வருத்தப்படாதே மற்றவர்களவ்வளவீயார்
வந்தமட்டும் பறிப்பாய் தங்கமே.

10. வெளுத்தநரைக்கிழவன் விரும்பிலவனைச்சேர
வெகுபண மவனீவான் தங்கமே-வெறுஞ்
சளுக்குனெவன் வந்தாலுந் தட்டிவிடாதேநீ
தருவான் வேண்டியதை தங்கமே.

11. திருடர்முறடர்வரிற் றினங்கைமேற்பொருள்தர
சென்றங்கோரிடஞ்சேர்வாய் தங்கமே-சொந்தப்
புருடனிருக்கில்வரப் புழக்கடையறையிற்போய்
போகித் தனுப்பிவைப்பாய் தங்கமே.

12. முன்னவனுள்ளிருக்க மன்னனொருவன்வர
முன்னந்தப்புரஞ்சேர்வாய் தங்கமே அவன்
றன்னையேபுழக்கடை தனிற்குட்டிச்சுவரேற்றித்
தாண்டிப்போகவிடுப்பாய் தங்கமே.

13. வைத்திருப்பவனுனை வைதெங்கேபோறயென
வாந்தியெடுத்தேனென்பாய் தங்கமே-பின்னும்
தெத்தித்தெருத்தியுந் திட்டிடவுஞ்சின்னசலபா
திக்குப்போனதாய்ச்சொல்வாய் தங்கமே.

14. அப்பன்வந்த பின்பிள்ளை யலையவரத்தழுவி
லதிலும்வெகுகாசுண்டு தங்கமே-தப்பென்
றெப்போதெவர்க்குமுறையினைப்பாராதேயணைந்து
ஈயுங்காசையறுப்பாய் தங்கமே.

15. அன்னைல்சேர்ந்தகன்றபின்னவன்றம்பிசேரவர
வளையப்பணம்வருக்தே தங்கமே-நெஞ்சில்
நின்னையமொருவனை நீநம்பிலோர்காசு
நிதிசேராதெக்காலும் தங்கமே.

16. தொப்பைவயிறன்வர துடர்ந்தேயவனைக்கூடி
துட்டுகளை யிழுப்பாய் தங்கமே-துக்கு
சப்பைச்சவ் வாடிகள் சந்தித்தாலும் விடாதே
தருவார் சில்லரைக்காசு தங்கமே.

17. ஆளைக்காலன்வந்து வறுகில்லவனைச்சேர
வருள்வான்கேட்டதைப்போலதங்கமே-கரும்
பூனையபற்றுநித்த புலியெதையும்விடாது
போற்பலரை யிழுப்பாய் தங்கமே.

18. நோயாளிதொங்கவும் நட்பமாயணைந்திட
நோட்டகா யளிப்பன்பார் தங்கமே-கெட்ட
வாயாடி வாதாடி வந்தொருவன் கூடியே
மருவவேண்டியதிவான் தங்கமே.

19. ஜாக்கட்சொக்காகாரர் தான்வாயாரென்று
சளுக்காபுளுக்கர் கேட்கில் தங்கமே-சாக்குப்
போக்காயக்காலைவைத் தள்ளோரிவர்களென்று
புகழாய்ச் சொல்வாயவரை தங்கமே.

20. என்பிராணநாதாநீ யெனைவிட்டகன்றிப்போ
எங்குசெல் கிருயென்றே தங்கமே-வஞ்ச
வன்மமாய்மயல்மூட்டி மடிபிடித்திழுத்துள்ளே
மதனைலீலைகள் செய்வாய் தங்கமே.

21. மன்னவன்கூடியுனை மருவிப்போம்போதவனை
வழிவிடாமல் மறித்தே தங்கமே-நீயோ
முன்னமேபொடிபோட்டமோகத்தால்நான்மெத்த
வுருகுறேன் சாமியென்பாய் தங்கமே.

22. இப்போதுபிரிந்துநீ ரேகிவருமளவு
மேங்கியிருப்பே னென்பாய்தங்கமேசொந்தக்
கைப்பிடிநாயகன் கடவுள்நீயே போய்வரக்
கண்டாணை யிடுமென்பாய் தங்கமே.

23. பிரியாமலன்றில்போற் பிணைந்துயிருவருமே
பிசகாதிருப்போ மென்பாய் தங்கமே-உயிர்
தரியேனுனைவிட்டு க்ஷணப்பொழுதேகாமல்
சாமிநீ யிருமென்பாய் தங்கமே.

24. ஒருவருள்ளிருக்க மற்றொருவருடன் கூடியே
வுறவாடேனு னென்றே தங்கமே-இளம்
பருவமடந்தையரைப் பக்ஷமாய்ப்புணராது
பறந்துபோவராரென்பாய் தங்கமே.

25. ஊரிலொருவரைவிட் டொருவரைப்புணர்தல்போ
லுண்டாநீ சொல்லென்பாய் தங்கமே-இந்தப்
பாரிலுண்மையிலேநான் பரபுருஷர்முகம்
பார்த்தறியே னென்பாய் தங்கமே.

26. ஜவளிவர்த்தகனொருசரிகைச்சேலையைக்காட்டில்
சாமிவாங்கித்தா வென்பாய் தங்கமே—மற்றப்
பவளமுத்துரத்தினப் பணிதியைக்காட்டிடின்
பஹுசாய்வாங்கிக்கொடென்பாய் தங்கமே.

27. சொந்தவீடுமெத்தைகள் சொகுசாய்பங்களா
[தோட்டம்
துரையே கட்டித்தாவென்றே தங்கமே-சொல்லி
உந்தன்பெயரெங்கு முலகில்விளங்குமென்று
உபசார்ந்தமாய்க் கேட்பாய் தங்கமே.

28. தமக்கைக்கமைந்தவர்தான்கேட்டபடிக்கெலாம்
தருகிறார் வேணதென்றே தங்கமே-இங்கே
நமக்குக்கிடைத்தநீர் நல்லநாயகனெனில்
நான்கேட்ட தரியென்பாய் தங்கமே.

29. நட்டுவனொருவேளை கிட்டநெருங்கிவந்தால்
நல்கவவனைச் சேர்வாய் தங்கமே-ராக
மெட்டுப்பாட்டகனொருவேளைப்பல்லைக்காட்டில்
விரும்பி யணைந்திடுவாய் தங்கமே.

30. கைவாரண்டகன்றவன் கடனுக்கலையவந்தால்
கைநழுவ விடாதே தங்கமே-தனது
மெய்வருந்தத்தேடி வேணதனமுனக்கு
விரைவிற்கொணர்ந்தளிப்பான் தங்கமே.

31. கண்டோர்கின்னோற்றக் கதைகேட்டிருந்தவண்ணம்
கருத்தியே நடப்பாய் தங்கமே-கிட்ட
பெண்ணைகண்ணேயென்று பெரும்புளுகர்வர
பிறட்டனென்றே நீக்குவாய் தங்கமே.

32. தட்டுக்கொருவனைப்பார் தணிக்கொருவனைப்பார்
சோற்றுக் கொருவனைப்பார் தங்கமே-உயர்
பட்டுக்கொருவனைப்பார் பணிக்கொருவனைப்
[பார்
பக்கத் தொருவனைப்பார் தங்கமே.

33. பழைமாப்பிளை தனைப்பார்த்தழைத்தொருவனைப்
    பரிவா யுறவாடிநீ தங்கமே-ஒன்றும்
இழையப்படுக்காதே யிருந்துபின்புறங்காட்டி
    எட்டியங் குறங்குவாய் தங்கமே.

34. எத்தித்தந்தி முத்திட வந்தால் முழங்கையால்
    இடிஇடி முகத்தில் தங்கமே-சற்றிக்
கத்திக்கதறிக்கொண்டைக் கம்மிடினுமவனைக்
    காலா லுதையடி. தங்கமே.

35. சம்மன்வாரண்டோரார் தவித்துனைத்தேடிவர
    நிலைக்கடையில் நிறுத்தி தங்கமே-நீதான்
மும்மரமாய்த்துடைப்ப முறத்தால் முறியவடி
    முன்பின் பாராமலே தங்கமே.

இவைவேசையர்க்குரியதாம்-இனி வியபிசாரிகட்
    குரியதுணர்க.

---

## வியபிசாரிகள் விஷயம்.

36. எண்ணிலாத சமுசாரிக ளிதைவிட மேலாய்
    எண்மடங் கதிகமாய் தங்கமே-மனங்
குன்றிடாதுபலரைக் கூடிவெகுபணங்
    கொள்ளை யடிப்பதைப்பார் தங்கமே

37. பெற்றோர்வீட்டிலொருநாள் பிறர்வீட்டிலி
    [லொருநாள்
    பெண்வீட்டி லொருநாள் தங்கமே-ஒண்டி
உற்றவுறவினரை யூருராய்ச்சென்றிவைக்
    குயர்பத்தினி யென்பர்பார் தங்கமே.

38. நாயகன்கேட்டாலும் நயனங்கள் பார்த்தாலும்
 நானென் றறியேனென்று தங்கமே-கெட்ட
பேயனென வெள்ளிப் பிறரைநிதங்கூடிப்
 பீடுதமிதெல்லாம் வாங்குறார் தங்கமே.

39. புருடனுள்ளிருக்கையிற் போயொருவனைக்கூடிப்
பொருளைப் பறிப்பதைப்பார் தங்கமே-பொல்லா
திருடன்வந்தாலுமே சென்றவனையுஞ்சேர்ந்து
 திரவியஞ் சேர்ப்பர்பார் தங்கமே.

40. பொய்டக்குடமாகம் புருடரிடஞ்சொல்லிப்
 புணர்ச்சி பலரைச்செய்து தங்கமே-சுய
மெய்பத்தினிகள்பலர் வேசைக்குமேலாக
 வெகுபேரைச் சேர்கிறார் தங்கமே.

41. திக்கற்றவளுக்கொரு தெய்வந்தேவாதியென்ன
 தேருந் திருநாளென்ன தங்கமே-வழியிற்
பக்கத்திலென்ன பலர்வரப்பார்ப்பதென்ன
 பரிவாய்ச் சரசமென்ன தங்கமே.

42. மக்கள்மனைதேர்விட்டுல் வயதுவளர்க்கிறேனென
 மற்றவர்க்குச் சொல்லிநாள் தங்கமே-முக்கி
அக்கம்பக்கத்திற்சுற்றி யலைந்துபலரைக்கூடி
 யவர்பணம் பறிக்கல்பார் தங்கமே.

43. கண்டமாப்பிள்ளைவிட்டு லண்டிப்பலரைச்சேர்ந்து
 கர்ப்ப மழிப்பவளார் தங்கமே-அவட்
குண்டானபந்துக்க ளுறவாய்ச்சமுசாரியாப்
 உள்வீட்டிற் சேர்ப்பவரார் தங்கமே.

44. சோற்றுக்கேனொருவீடு அட்டுக்கேனொருவீடு
 தொழிலுக்கேனொருவீடு தங்கமே-ஊற்
சாற்றுக்கேனொருவீடு தங்கவேனொருவீடு
 தக்க சமுசாரிக்கேன் தங்கமே.

45. சமுசாரிகள்தாசிபோற் றனலங்கரித்துள்ளே
தனவான்களைச் சேர்வதே தங்கமே-நமது
வமிசாவளிகெட வாங்குறார்வெகுபணம்
மசப்பிள்ளை யறியார்பார் தங்கமே.

46. சந்ததஞ்சமுசாரி தட்டுவாணியாய்ப்பணம்
தான்பறித்தல் போதாமல் தங்கமே-சதா
பந்திக்கப்போலீசிற்பர்த்தாவைப்பிடித்துபணம்
பறித்துண்ணவலேகிறார்பார் தங்கமே.

47. நங்கென்னசிங்கென்ன நற்கைகால்காப்பென்ன
நகையென்ன நட்டென்ன தங்கமே-குலுக்கு
பொங்கென்னபுகழென்னபொலிப்புபூரிப்பென்ன
புருஷனிடம் வாழார்க்கு தங்கமே.

48. நாயகன்வெளிசெல நாரிவீட்டுளதெலாம்
நன்றாய்ச்சுத்திக் கொண்டோடி தங்கமே-கொடிய
தீயவன்தலைமறைந் திடவுஞ்சமுசாரியாய்
திரிவளங் கங்கேபார் தங்கமே.

49. கருக்காயூர்மேற்போன கழுதையழுவர் குட்டி
சுரைத்துப்பத்தினியாய்ப்பார் தங்கமே-காண
கொறுக்கரையாப்புவெள்ளை குழிகிரந்திபுண்சுருக்
குடனெளி வோரைப்பார் தங்கமே.

50. கொண்டவனைநீக்கிக் கண்டவர்க்குமகளைக்
கொடுத்துமணஞ் செய்வரார் தங்கமே-கெட்ட
முண்டைக்கீனசாதி முன்னிற்போர்கட்டுவோர்
முற்றிழி குலத்தோர்பார் தங்கமே.

51. மயக்கிப்பொருள்பறிக்கு மார்க்கமிதனைக்கண்டு
வாடவரை நேசிப்பாய் தங்கமே-யாரும்
வியக்கக்கைவரண்டபின் மெல்லெனவனைவிட்டு
விலகும் வழிதேடி தங்கமே.

52. இங்குனைக்காப்பேனென் றிதங்கள்மிகப்பேசி
  இனிபோகமாட்டேனென்றால்தங்கமே-அங்கு
சங்கிலிநாய்போலே தானென்னை விட்டிடுஞ்
  சனிபோற்பிடித்தோட்டுவேன் தங்கமே.

53. சிறப்பாய்ச்செழுமணைவைச் சித்திரக்கவிதேவேந்
  திரநாத புலவன்சொல் தங்கமே-நமக்
குறப்பாயிருக்கையி லோர்குறைநேராது
  உறுதியாய் நம்படி தங்கமே.

54. என்சொற்படிநடந்து மிருக்கிலனுதினமு
  மின்பவாழ் சுகம்பெற்றே தங்கமே-உன
தன்பர்க்கினியவளா யவர்சொத்தனைத்தும்பெற்
  றகமகிழச் சிவிப்பாய் தங்கமே.

இவ்வாறு போகம் சுந்தராங்கி என்னுந் தாய்க்கிழவியானவள் தன்மகள் தஞ்சாவூர் தளுக்கு தங்கத்துக்கு போதித்த தனைத்தும் பூரணமாய் தன் கருத்திற் றிருத்தமாயிருத்தி உருத்தவும் அவள் தன் தாயை நோக்கி நீர் சொன்னதியாவுங் கவனித்தேன். அதில் வசியமருந் தொன்றுதான் எனக்குப் புலப்படவில்லை. அதைச் செய்யும்விதமும் பாபுருஷர்க்கேற்றப்பதமும் எனக்கு விவரமாய் எடுத்துரைக்க வேண்டுமெனப் பிரார்த்திக்கையில், தாய்க்கிழவி மகளே! நமது குலாசாரத்தொழிலில் நாமிடுமருந்தானது செய்வதோ மகாதுர்லபம். அதனை நமதிடம் போக்குவரத்தாயிருக்கும் புருடர்க்குக் குன்றிமணிக்கு ரெண்டெடைத்தனை யெடுத்து மூன்றுபங்குசெய்து மூன்றுநாள் மூன்றுவேளை பாலிலோ, பழத்திலோ,

பலகாரத்திலோ, கறிபதார்த்தத்திலோ, மிட்டாய்களிலோ, காப்பியிலோ, குப்பியிலோ, கனிரசத்திலோ, கள்ளிலோ, சாராயிலோ, மற்றெவ்வித தின்பண்டங்களிலோ அதை முற்கூறியபடி அவர்களுக்கு எவ்விதத்தேனும் உள்ளுக்கேற்றிய பின் தங்கள் சொத்தைத் தங் கொள்ளையடிப்பதே நமக்குரிய சமுதாய குணமாம். அப்படிக் கேற்றுவதினால் அவ்வாடவர் தம் முயிரைக் கேட்டாலுங் கொடுப்பரே யன்றி தடுப்பதரிது. அதினாற்றான் பலரும் நமது சொற்படி கேட்டு நாய்போல வோடிவந்து நமது காலைச்சுற்றிக் கால்மாட்டில் விழுந்து கிடப்பது யதார்த்த மாகையால், அதை ஒவ்வொருவருக்கும் அவ்வவ்விடங்களில் எவ்வித மாதர்களும் செவ்விதாய்ப் பிரயோகிப்பதே நலமெனக் கருதலாம், அப்படிக் கேற்றாவிடின் நமது ஜெபம் ஒன்றுமே அணுவேனும் நிறைவேற மாட்டாது. அவை யேற்றிடின் நமக்குள்ள வதிகாரம் கொஞ்ச நஞ்சமல்ல. அவரை நாம் ஆடுகுரங்கே ஆடென்றால் இவ்வாலில்லாக் குரங்குகள் பலவிசை நம்மெதிரிற் குதித்துக் கூத்தாடுவதிற் றடையில்லை. அதை விரும்பாதவரும் வேசிகளல்லர், உள்ளுக்குத் தராதவரும் நாரிகளல்லர். அவ்வித மருந்தை யான் முன்னம் செய்த கஷ்டம் எனக்குத் தெரியும். அவை ஊரிற் பலபேர்களிட மிருப்பதைப் போலவுமல்ல. இது மெத்தவும் உயர்ந்தது. இதனை நமது பெரிய பெட்டியில் ஓர் செப்பு டப்பியில் தங்கபரணியில் வெள்ளிச்சிமிளில் உள்ளிருப்பதற்கு சிவப்புப் பட்டுத் துணியில் வெகு பந்தோபஸ்தாய் வைத்துச் சுருட்டிக்

சட்டி கீழறையில் வைத்திருக்கிறேன். அதனை யெத்
தவும் மேன்மையுள்ளவர்க்கு மாத்திரம் உபயோகித்தல்
வேண்டும். மற்ற கேவலமானவர்க்கு வேறொரு
வெண்பட்டில் வைத்துச் சுருட்டிக்கட்டி வைத்திருப்
பதை உபயோகிக்கவேண்டும். இதனுல் நமது
குலாச்சார தர்மம் இதைப்பிரயோகித்துதான் நம்
மிஷ்டகாமியார்த்தங்களை நிறைவேற்றமுடியும். அந்த
முறையையும் விவரமாய் உனக்குப் பிரித்துச் சொல்
கிறேன். அதையும் கவனமாய்க்கேட்டுக் கொள்வா
யென்று தாய்க்கிழவியானவள் சொல்லத் தொடங்
கினுள்.

---

## தாய்க்கிழவிசொல் வசிய மருந்திடு முறை.

கிஞ்சுகம்போலச் செஞ்சுமென்மகனே!
வஞ்சகமறவே வசியமாமருந்தி
  டன்புடன்காண வனைத்தையுமெடுத்து
  தென்புடனறியத் தெளிவதாயுனக்கு
சொல்லுவேனன்றய சுகமுடனிங்காக
வல்லியபாக வருத்துரைப்பதைக்கேள்
  காரண்டகத்தலையுங் காடையினகமும்
  பாராங்கதைபிச்சும் பன்றியின்கொழுப்பும்
பச்சைப்பாம்பினுலும் பருந்தின்றலையும்
பச்சோந்திபிச்சும் பருங்கோழியிணையும்
  உடும்பதிணுக்கும் ஓரியின்மூக்கும்
  கடும்புலிப்பிசையுங் கழுதையினிணமும்
கரும்பூனைபிசமுங் கருநாய்[illegible]யும்
குரங்கதின்விந்துங் கொடுங்காடிசல்வும்

மதுரமாமிசத்தினும் வருந்துசாயினும்
சதும்புமீன்வெளவால் சுராமீன்புட்டினும்
சனிபலவகையினுங் கடையிட்டாய்களினும்
இனித்திடமூன்றுநா ளேற்றிடத்தனைக
புள்ளிசொத்தனைத்து முரிந்துகைவரண்டான்
பெண்ணவேயிவனை விரட்டிபோட்டிடவே
பக்கமாயளிக்க வுரைத்ததவுன்னை
வாக்கதுபோல மாட்டிடுதற்கே
இம்முறையதனை யயல்புடன்கண்டு
செம்மையாய்ச்செய்து சேர்ப்பிவாயே.

தஞ்சாவூர் தளுக்குத்தங்கமென்பவள் தாயாகிய போகம் சுந்தராங்கியென்னும் தாய்க்கிழவியைநோக்கி அம்மா! இப்படி நாம் கஷ்டப்பட்டு செய்தமருந்தை நாம ஒருவனுக்கு அதை நீ சொல்லியபடியே மூன்று விசை எவ்விதவஸ்துக்களிலோ கலந்து அவனுக் குள்ளூத்தேற்றிவிடின், நமக்கவன் எவ்விதம் ஆய்விடு வான் அதைச் சொல்லவேண்டுமென்று கேட்கையில், தாய்க்கிழவி அதின் பலனை விவரமாய்ப்பிரித்து முழுதுஞ் சொல்லுகிறாள்.

தாய்க்கிழவி அடியம்மா! அன்னத்தைப்போல நடையும், கிஞ்சுகம்போற் கொஞ்சுமொழியும், மயிலைப்போலச் சாயலொயிலும், குயிலைப்போல குரலோசையுமுடைய என் கண்ணே! இவ்விதமாகத்தான் அந்த வசியமருந்திட்டை யான் முன்னஞ்செய்தது. ஆயினும் அதை முடிக்க உன்னால் முடியாது. அந்தவஸ்துக்களையுஞ் சேகரஞ்செய்யமாட்டாய், ஆனால் அம்முறையை நீமாத்திரம் தெரிந்துகொண்டாயல்

லவா? அதுவே போதும், உனக்கு தற்காலம் வேண்டிய மருந்திருக்கின்றது அதனை இப்போது கையாடி வாத்தடையில்லை. அப்படி அதை ஒருவனுக்குள் ளேற்றிவிடுவாயாகில் அவன் எமதிடம் இருப்பதைச் சொல்லுகிறேன் கேளென்றன்.

1. குருவென்பார் குலதெய்வம் நீயேயென்பார்
   கும்பிடுவார் கூப்பிடுவார் கூடேசெல்வார்
   வருமளவும் வழிபார்ப்பார் மயங்கிநிற்பார்
   மடிந்திடுவார் தலைசுற்றி மண்ணில்வீழ்வார்
   கரும்பாவர் மனைவியைக்கைதொர்பார்செல்லார்
   கடைகெட்ட நாயாவார் காலில்வீழ்வார்
   சருகாவார் சலித்திடார் தவிப்பார்சார்ப்பார்
   சண்டியவ ரஷ்டமத்தின் சலிபோகிலச்சே.

2. ஆச்சம்மா பருடான்றே வசியமாவார்
   அடிபணிவா ரடிமையா யினத்துமீவார்
   பேச்சம்மா கேட்டிருப்பார் பிரியமாட்டார்
   பின்றொடர்வார் நீ பிரிந்தாற் பிராணமாய்ப்பார்
   வாச்சம்மா வுனக்கேவைப்புச் சொத்தெல்லாம்
   மகிழ்ந்தளிப்பார் கலவிசெய்து மருவிவாழ்வார்
   எச்சம்மா யாதொருவர்க் கிதைதராதே
   யெப்பொழுதும் நீசெய்து பேற்றிடாயே.

3. எற்றவே யிதையுனக்கு வெவருரைப்பார்
   என்காமளே வேறொருவர்க் கிதையீத்தி
   தோற்றவே யியளியுன் காலைக்கவ்விச் [டாதே
   சணங்கலைப்போல் வீழ்ந்திருப்பான் ஒற்றிய
   [ங்கே

அவர்கள் அனைவரும் வறுமையுற்றிருக்கின்றன ரென்றாள்.

தளுக்குதங்கம்:—மெய்தான் அம்மா! தாங்கள் முன்னம் குலாச்சாரவிர்த்தியெனச் சொன்னமார்க்கம் எதுவோ அதனை இப்பொழுதெனக் கெடுத்துரைத்தாயல்லவா? யான் தெரிந்து கொள்ளக் கூடும். அப்படி தெரிந்துகொள்ளாத விஷயத்தில் அவையாது பிரயோசனத்தைத்தரும். ஆதலால் அதின் விவரத்தையும், மற்ற காரணங்களையும் சம்பூரணமாய் தெரிவிக்கும படியாய் மெத்தவும் வருந்திக் கேட்டாள்.

தாய்க்கிழவி:—கேளும் அம்மா! நமது குலாச்சாரவிர்த்தியாவது நம்மைப்போன்ற தாசிகள் எக்காலும் ஓரூரில் ஒருவீதியில் ஒருவீட்டில் குடியிருப்பாராகில் அவர்களுக்கு பழமைப்பட்டவராதலால், அவர்களை மற்றவர்நத்துவதரிது. அவ்விடத்தில் மற்றொருத்தி வந்து குடியிருப்பாளாகில், அவளைமாத்திரம் பலரும் நத்துவதுண்டு. அதேனெனில், அவள் புதியவளையென்பதைப்பற்றிதான் இத்தாசிகள் மாலைநேரத்தில் குளித்து சிங்காரித்துக்கொண்டு பொழுதுபோவதற்கு முன் போஜனமுண்டு நாகரீகமாய் தாம்பூலச் சுருள்மடித்துக் கைப்பிடித்து தெருவாசற்படி கதவண்டைநின்று கொண்டு போவார்வருவாரைப் பார்த்திருப்பதில் யாராவது கொஞ்சம் டம்பாகாரமாய் வரில், அவர்கள் கிட்டநெருங்கிவருந் தருணத்தில் இவள் தன் தலைநீட்டி எட்டிப்பார்த்துவிட்டு அக்கதவின் பின்புறமறைவதும், அவர்கள் இவளைப்பார்த்து

ஒருவேளைத் தேங்கிநிற்பாராயின், தான் அவர்களை அழைத்துக்கொண்டு உட்செல்லுவதும், அவ்வேளை வேறொருவர்வந்தால், அங்குள்ளவர் அவர்களை அவள் கொஞ்சம் வேலையாயிருக்கிறாள், குளிக்கிறப்போனு மிருக்கிறது. கொஞ்சம் உட்காருங்கள் என்பதும், அப்படி முன்வந்தவன் வெளியிற் சொல்லும்போதே அவன் பிள்ளைவந்தபோதினும் அவனுடன் முறைபாராது கூடிச்சுகிப்பதும், வேறொருவன் புட்டைப் பெருத்தவன், அல்லது விருத்தன், நரைத்தக் கிழவன் வரில், அவர்களை விடாது போகிப்பதும், நிலையாய் வைத்திருப்பவன் அங்கில்லாதவேளையில் மற்றொருவன் வரின் அவனைப் புணர்வதும், அப்படிப் புணர்கையில் நிலையாய்வைத்திருப்பவன் வரில், அவ்வேளையில் அவள் பக்கத்துதெருவிற்குப் போயினளென்பதும், அப்பக்கத்துத்தெருவில் அங்கொரு அறைபாடகைக்குப் பேசிவைத்திருப்பதில தன்னிடம் நிலைப்பாயுள்ளவனிருக்கையில் மற்றொருவன் பழகினவனோ அல்லது புதியமனிதனோவரின், அவ்வேளை நிலையாயுள்ளவனிடம் நீர் கொஞ்சநேரம் இங்கேயே இரும் நான் பக்கத்துவீதிக்கு அவசரமாய்ப் போகவேண்டுமென்றகன்று, வந்தவனைக் கைவிடாது அங்கழைத்துக்கொண்டுபோய்ப் புணர்வதும், அல்லது அறுமுகமானவர்களிடஞ்சேர்ந்து புணர்ந்துவருவதும், அந்த அறுமுகமானவர்களும் ஒருவேளை இம்மாதிரி இவ்விடம்வந்து சேர்ந்தவளாவது முண்டென்பதில், இதோடு ஒருவேளை நட்டுவன், தாளந்தட்டுவன,மத்தளங்கொட்டுவன் வாத்தியார் முதலியவர்கள் தொங்

தரைசெய்திடில் அவர்களையும் வெட்டிக்குத் திட்டில்லாது சும்மாய் வெறுப்புக் காத்தமாட்டாமல் ஒரு வகை பார்த்துக்கொள்வதுமுண்டு. இத்தாசிகட்கு முக்கியம் சோற்றுக்கொருவனும், துணிக்கொருவனும், வாடகைக்கொருவனும், மற்ற செலவிற்கொருனும், துணைக் கொருவனும், தூதுக்கொருவனுமே வாடிக்கையாய் வைத்துக்கொண்டு அதில் ஒவ்வொருவருக்கும் நாள் டயம் வேலைகள் ஏற்படுத்தி அவர்களோடுஞ் சேர்வதுண்டு. அதிலும் ஒவ்வொருத்தி தன் வச்சக்காரனை மற்றொருத்தி கைவசபடுத்திக்கொள்வதில் தாங்கள் போரிடுவதுமுண்டு. இவர்கள்வைக்கு மாயமருந்தால் பலர் தாயைமறந்து தன்சுகம பாத்தியத்தை இத்தாசிகட்கே தாரைவார்த்து தலைமொட்டைகளாகிய தருதலைகள் பலபேருண்டென்பதிற் சந்தேகமில்லை இதனை நீ முற்றுங் கவனியென்றாள்.

தளுக்குதங்கம்:—அம்மா! நீ சொன்னதியாவுங் கவனித்தேன். அவையனைத்தும் நமது குலாச்சாரத் தர்மத்தைப் பற்றியதா யிருந்தபோதிலும், தற்காலம் நாம் உஜ்ஜீவிக்கும் விதம் எப்படியோ அதையும் மற்றப்படி நமதிடம் போக்குவரத்தாயிருப்பவரிடம் எப்படியவர் கைப்பொருளை நாம் பறிப்பதோ அதையும், அவர்களை நாம் எதைப்பற்றிப் பிணங்கிப் பிணங்கிப் வணங்கிவணங்கித் தனத்தைக் கவர்வதோ அதையும் சொல்லென்றாள்.

தாய்க்கிழவி:—கேளடி மகளே! நீ புது கோராவானதாலும், எங்கும் எதிலும் அடிபடாதிருப்பதாலும், ஒருவர் உன்னைத் தீண்டாதிருப்பதாலும்,

உனக்கு யாதொன்றுமே தெரியாது. நான் உன்னை
அப்படிக்கெல்லாந் திரியவிடவில்லையாதலால், நீ மண்
ணாந்தரையாயிருக்கிறாய். இனி உன்னாலேதான் நாங்
கள் கடைத்தேறவேண்டும். நீயோ மஹா சௌந்
தரியமாகிய யௌவன ஸ்திரீ. இப்போதுதான் நீ
தக்க சீமானை ஸ்நேகம் பிடித்து அவனது கைப்பொ
ருளைப் பலவிதத்திலும் கவர்வதுத்தமம். இவ்வாலப்
பருவம் மாறிவிடின் யாவும் அபலமாயும் நமது விஷ
யம் சபலமாயும் போய்விடும். ஆனதைப்பற்றி முக்
கியமாய் இங்குனக்குத் தெரிவிப்பதென்னவெனில்
நாம் பிழைப்பதற்காக முன்னம் தக்கபடி ஓர் சீமானை
எவரைக் கொண்டாவது நம் கைவசப்படுத்திக்
கொள்ளவேண்டுவ தவசியம். அதன்பின் அவனை
அசக்கி மசக்கி தசக்கி பசப்பி சாந்தி முகூர்த்தத்திற்
கென்றும், புது சோபனத்திற்கென்றும், துளிமணி
களுக்கென்றும், நகைநட்டுகளுக்கென்றும், உனக்கு
நோய்நொடிக்கென்றும், பின் எனக்கு ஜன்னிபிறந்து
விட்டதற்கென்றும், அப்பால் உன் தங்கையைக்
கோயிலில் முத்திரை போடுவதற்கென்றும், மறுபடி
கெச்சைசக்கட்டுவதற்கென்றும், செப்பும் பொம்மைக்
கலியாணத்திற்கென்றும், அதற்கு கச்சேரிவைப்பதற்
கென்றும், உனது நகைகளை கொள்ளை போய்விட்ட
தற்கென்றும், போன பொருளை வாங்கித்தருவதற்
கென்றும், தோட்டம் பங்களா வாங்கித்தாவென்றும்,
அதற்குத் தக்க சகல சாமான்களை அமைப்பதற்கென்
றும், டமதக்காரருக்கென்றும், இவ்விதமாய் பலவாறு
எத்தியேமாற்றி அப்பப்போது அவனிடம் பிடுங்கிக்

கொள்வதுதான் காரியத்தனம். ஆகையால் இவன் விஷயத்தில் நாம் அசமந்தமாயிருக்கில் பின்னால் அணு வேனும் நமக்கு அகப்படுவது கடினம். முன் மோஜி லேயே அவனை முழுதும் மொட்டையாக்கிவிடவேண் டும். இத்தனையும் நமது மாயமருந்திட்டை யேற்று விடின் ஒன்றுமே பலனில்லை. ஆகையால் நீ யாதி னும் வெகு ஜாக்கிறதையாயிருவென்றாள்.

தளுக்குதங்கம்:—என் பிரியமுள்ளதாயே! நீ நமது வீட்டிற்கும் எனக்கும் பெருந்தலையாயிருந்தும் இதுவரையிலும் நமதிடம் வருத்துபோக்கு ஒருவரும் செய்யாதிருக்கின்றதினால், என்ன சுகம் இனியாகிலும் நாம் கௌரவமடைவதைப் பாக்கவேண்டியதாகை யால், அதற்கெப்படிச் செய்யவேண்டுமோ அதை விரைவில் நிறைவேற்ற தக்க முயற்சிகளைத் தேட வேண்டுமென்பதாய் தன் தாயினிடம் சொன்னாள்.

தாய்க்கிழவி:—அடியம்மா! நான் சும்மாயிருக்க வில்லை. உனக்குமுன் பிரயத்தனஞ் செய்துகொண்டு தானிருக்கிறேன். நேற்று தினந்தான் பிரபலரான வெங்கடராமையரிடம் இதுவிஷயத்தைப்பற்றி சொல் லியிருக்கிறேன் அவர் கூடியசீக்கிரத்தில் நமது விஷ யம் பூர்த்தி செய்விப்பார்.

# 2-ம், அத்தியாயம்.

மேல் அத்தியாயத்தின் கடைசியில் வந்த வெங்கடராமய்யரென்பவரின் நடத்தையை சிறிது கவனிப்போம். அவர் எப்படிப்பட்ட உத்தமரென்றால், "காலையுமாலையும் நான்மறையோதா அந்தணரென்போரனைவரும் பதரே" என்பதாய் எக்காலும் தாசிவேசிகள் வீட்டிற்சென்று அவர்கட்குத் தக்கபடி வைப்பு மாப்பிளைகளைக் கூட்டிவைப்பதே தங்கட்குக் குருவாயிருப்பதில் ஐயர் சென்றவிடமெங்கும் சிறப்புதான். இவரறியாத தாசிகளும், சுற்றித்திரியாத வீடுகளும ஒன்றேனுமில்லை. இதிலும் தேவடியாள் யாண்டார்களோ. இவரை மெத்தவும் தழுவுதலாய் எங்கிலுங் கொண்டாடிக் கைவிடாதிருப்பர். அதிலும் இவர் வெகு பக்குவமாய் தக்கபடி அவரவர் மொட்டந்தலைக்கும் பிறர் முழங்காலுக்கும் சேர்த்து முடிபோடுவதில், முதன்மையாய் நின்று முடிக்கவல்லவர், தானில்லாத காலத்தில் பல தாசிவேசிகளும், மற்றக் கூத்திக்கள்ளர்களும் சங்கடப்பட்டலையுந் தருணத்தில் இவரைக்கண்டவர் வியப்படைய க்ஷணநேரத்தில் அவரவர் மனதிற்கு திருப்திகரமாய் ஒருவருக்கொருவரை ஜாயின்டு செய்துவைத்து அந்நாளிலும் சம்திங்க் வாங்கிக்கொள்வர். இவர் இல்லாத நாட்டிக்கிலக்கியமாய், எல்லவர்க்கும் நல்லவராய், எக்காலமும் இதே தொழிலாயிருப்பவர் எப்பே நல்லவைத்தாலும் அங்

கே இவரைத் தேடாதவருமில்லை இவரால் வெகுதாசி வேசிகள் சுகப்பட்டும், பல கனதனவான்கள் கெட்டலைந்தும் போயினர்.

இவ்வரிய தன்மைவாய்ந்த ஐயரவர்கள் தாய்க்கிழவியின் உத்தரவை மேற்கொண்டு சென்னைமாநகரத்தில் முத்தியாலுபேட்டை லிங்கசெட்டித் தெருவில் ஓர் பிரபுவாகிய கலியாணசுந்தரம் பிள்ளையின் ஜேஷ்ட குமாரனாகிய துரைரங்கப்பிள்ளை யென்பவனைத் தயார்படுத்தும்பொருட்டு மேற்படி பிள்ளையவரிடம் வீட்டிற்குச்செல்ல துரைரங்கப்பிள்ளை இவரைக்கண்டதும் என் ஐயரே! வெகுநாளாச்சுது தங்கள் தரிசனங்கண்டு எது இங்கெழுந்தருளினது. என்னமோ விசேஷம் அது ஒன்றுந் தெரியவில்லையென, ஐயர், பிள்ளையவர்களுக்கு நம்மபேரில் தயவில்லை. அதுவும் நாம் செய்த பாக்கியந்தான். ஆனாலும் பரவாயில்லை. ஒரு விசேஷமான சங்கதி அதைப்பற்றி தங்களிடம் வந்தேனென்றார்.

துரைரங்கப்பிள்ளை:—ஓய் ஐயரே! நீர் வந்த சங்கதி அந்திரிவாளோ என்ன? அதை முன்னே சொல்லென, ஐயர் ஆம், ஆம், அதுதானென, இவன் சரி சபாஷ் நல்ல சங்கதி சொன்னீர் வெகு சந்தோஷமென ஐயர் அதற்குதக்க சற்பாத்திரம் தாங்கள்தான் அதைப்பார்த்தால்மெத்தவும் சந்தோஷப்படுவீரென, ஐயர் அது என்ன இங்கத்தி கோராவா? வெளியூர் கோராவாவென, ஐயர் அது தஞ்சாவூரது புதுகைதான் இன்னம் அரும் அதைத் தீண்டவில்லையென இவன் அப்படியா? எப்ப போகலாமென ஐயர் தங்

சரணங்கள்.

கொண்டல் நிகர்த்தமலர்க் கொண்டை
குலவுசிறை மயில்கள் நடமிடவருமுயர். (கொ)

குளிர்ந்த கடலலை யருந்தி மலைமிசை
யெழுந்துலகில் உயிர் விளங்க மழைபொழிய (கொ)

கொக்குமரக்குயில் வர்க்கமனத்துயர்
பெற்றுவளர்க்கிளை ளிக்ககுடித்தெழு (கொ)

கூறுமர்ச்சுன ணழகியரதமிசைச்
சாரதித்தொழில் செயுமெழில்நாகரி
வீரலட்சுமி மகிழும்வாதனுப
காரவச்சுத னுயர்தொழி லதுபுரி. (கொ)

கோதறுகாவர் கோல்வளையாமலு
மாதவர்மாதவ மேயழியாமலு
மேதகுதேவர்கள் பூசைவழாமலு
மாதமும்மாரிபெய் தேவளர்சீதள

கொண்டல் நிகர்த்தமலர்க் கொண்டை-கண்கள்
குதிக்கும்விசித்திரயிளங் கெண்டை
மண்டலமதிக்குங்கால் தண்டை-அவள்
வார்த்தைக்கிளைசொல்வேன் கற்கண்டை

எண்டிசைப் னுமங்கைக் கிணையிலையென் சொல்நாடு
இருப்பதுநாகரீக மிசைந்திடுமலைநாடு
கண்டர்வடயல்கொர்ளுங் கொங்கைக்குநிகர்கோடு
சுந்தரமுரகரி கொங்கைக்குள்வளர்கோடு

இங்கிதப்பெண்கள் எனும்பொனின் மிஞ்சுரையாணி
[அமிர்தகேணி
பொங்குமதன் கலைபின்கரைகண்டிடு திராணி-யுடைய
[வாணி
மங்கைகெழுந்திருவந்தருள்பங்கசபாணி-சுகுணப்
[பூணி
தங்கசங்கிதமெனும் பயிர்தங்கியகாணி-அணிமதாணி
இடையொருதுடியினு மிகுத்த கொஞ்சம்
இனியவரிசைதரு சர்க்கிய புஞ்சம்
விடபுருஷர்கள்மன மௌனச்சொல் கஞ்சம்
மிசைபனவரதமும் இருக்கும் அஞ்சம்
இதந்தந்திடுநல் வணஞ்சந்தகமுயர்
பதஞ்சிங்கொடுப் ரபந்தஞ் சொலுவள்
நலங்கொண்டுசுர ரிடங்கண்கரிலை
யருங்கண்டுமதி மயங்கும்படிநல்
இயலோடுநடன்மி ீவள் நயமுடையவள்
அயல் ஒருவரையிது வரையிலும் அறிகிலள்
எண்ணரிய வஞ்சியய தோபன்னிரண்டு
என்றுவதமிஞ்சுமுனி வோர்செய்வார் தொண்டு
எதிதில் அற்புத ராஜலட்சனி
மோகவுற்பவ ரூபசித்தினி
சாதிரித்திர ரேகை யொத்தவள்
ரிசுளிப்பட ளெயமனைத்தருள்
இந்திராசத்தியவரிக் சந்திராதிபுண்டபுய
வர்த்ராவதனமோட சுந்தராசிங்தனைசெயும்
எரார்தனுவளர் . மாராகனகரு
போரகனசமு சாராசெயராண

சூராபுவிபதி காராப்ர பல ஒய்
யாராசுகுணவ ஜீராவிரிதரு
ஏழுலகுபுகழ் காவியெனுமக்
கானதொடையணி மார்ப ஒருவரை
இணைநண்ணுத்தைரிய நயகுணசுபகர
மணியண்ணுத்தைமகி பதியருளியசுத
இலகுதங்கமலை நடுங்கவருமத
மொழுக்குஞ்சரமு கிலண்டு துரகித
இன்றறுவைந்தரு. நந்துதனந்தின
முந்தரும் எங்கள் சௌந்தராஞ்சித
இசைகாமியப்பன் தமிழ்க் கோரமிர்தமே பொமாது
புஜமேவுதானவிகடா னந்தமுகிலே நின்மீது
மையலாகி.

சுவாமி இந்த ஒரடிபதங்கள் மாத்திரம் தங்களைப் போல இவ்வளவு ஸ்வாரசமாய் இங்கே யாரும் பாட மாட்டார்கள். இதைக் கேட்க கேட்க மகா வானந்தகரமாயிருக்கின்றது. தங்களுக்கும் தேசகாலமாய் விடுகிறது. எனக்கும் வேலையிருக்கின்றது என்பதாய் ஐயருக்கு சம்திங் செலவுக்குக்கொடுத்து சுவாமி தாங்கள் மாலை நாலுமணிக்கெல்லாம் தடையின்றி வந்துவிடுங்கள் நாம் போகலாமென்பதாய்ச் சொல்லி ஐயரை அவாள்வீட்டிற்குப் போகும்படியாய் அனுப்பிவைத்தார்.

துரைரங்கப்பிள்ளைக்கு அன்றுதான் * ஏழரை

* ஏழரைநாட்டுச் சனிதுடரில், "பனிரண்டெண்ணெட்டிற் பத்திரு நவநாலைந்தில், சனியன் வந்திட்டால் நஷ்டம் தனச்சேத முயிருஞ்சேதம்,

நாட்டுச்சனி பிடிக்கவாரம்பித்ததால், ஐயரே அச்சனி யனுய் வந்தனர். அதிலும் வாழுவரும்போது வளர்ந்துவரும் புத்தி, கேடுவரும்போது கெட்டுபோகும் புத்தியென வந்து நேர்ந்துவிட்டது. இவையனைத்திற்கும் தாய்க்கிழவிகளுக்குதான் முக்கிய காரணமாயிருக்கின்றது. அவளகல, தான் அடுத்தவர் குடிகெடுவதும், அப்பாலும் பிறர்சேரவிடுவதும், அவர்

---

தனிசிறை மானபங்கப் தன்னறிவாலே மோசம்,
விடுவிட்டு நாடுவிட்டுமெறுதரைக்கேகுவானே" என்னுநிச்செய்யுளின்படி சிமானுகிய துரைரங்கப்பிள்ளையை ஒட்டாண்டியாக்க உடந்தையாயுதித்த தசக்கி மசக்கித் தட்டிப்பறிக்குந் தாய்க்கிழவி சமத்காரமானது தனது குலக்கொழுந்தாகிய தஞ்சாவூர் தளுக்கு தங்கப் சளுக்கினல் இவனுக்கு வரும் இடரனைத்தும் இதைமுற்றும் வாசித்துணர நன்ருய் விளங்கும். இது தானு இவ்வஷ்டமச்சனியன் சந்திரராசிக்கு எட்டில் வருவனுகில் அஷ்டமச்சனி புட்டத்துத் துணியையு முழிவனென்பதற்கு, "மூடவனூர் ஜன்மந் தன்னில் மூர்க்கமாமிரண்டு நான்கில், திசலலா வெட்டிற்பத்திற் செய்யப்பன்னிரண்டில், உடமைநற் பொருள்கள் மாதி ஒன்றொழியார்கள் நாசம், அருமையாய்ப் பதியும்விட்டு வரசனலைச்சலாமே" இவ்வித கொடிய துன்பங்களிலாழ்ந்து கலங்குலைந்து மனமெலியச் சம்பவிப்பது வாஸ்தவமே. எனினும் "மாளாப் பளர்க்கு வண்டிமை, மீளாப்பணத்துக்கு வேசியைச் சேர்" என்பதை யாவரும் கவனித்து நடந்துய்க.

களையும் இவ்வாருக்குவதும், அவர்களிடம் உண்டை மருந்துகளே ஒத்தாசைசெய்கிறது யாவர்க்குந் தெரிந்த விஷயம் ஆதலால் அவர்களை யணுகவே கூடாவாம்.

வெங்கட்டராமய்யர்:--உடனே தாய்க்கிழவியிடம் வந்து என்று சுந்தரம் உங்கள் வேலையைமுடித்துவிட்டேன். நல்லகொழுத்த கடாத்தான், உங்களுக்கும் நல்லகாலம், நானும் உங்களுக்கு அகப்பட்டுக்கொண்டேன். சாயங்காலம் ஐந்துமணிக்கு அவர் வருவார். அப்போதுதான் உங்களுக்குத் தெரிய வரும், அவர் கிடைப்பது மகாவரிது. நேக்கென்ன தருவீர் அதை முன்னேசொல்லுமென ஐயர் தனக்கு வரும்படியை கைமேல் தந்திடுமென்றார்.

ஐயர் சொல்லியதை தாய்க்கிழவியும் தன்மகளுங் கேட்டுச் சந்தோஷப்படுகையில, தாய்க்கிழவி அவர் யார்? எங்கேயிருக்கிறது? தன்பேரென்ன? தான் எப்பேற்கொத்தவர் அதைச்சொல்லென, ஐயர், அவர் முத்தியாலுபேட்டை லிங்கசெட்டித்தெருவில் ஓர் பிரபு கலியாணசுந்தரம்பிள்ளையின் ஜேஷ்டகுமாரன் துரைரங்கப்பிள்ளை யென்பவன் ஒரு கோடிக்குடையவன் எனக்குண்டானதை என் கைமேற்றந்துவிடு மென்றார்.

தாய்க்கிழவி:—சுவாமி! நாங்களோ தங்களுக்கடுமை. அதிலும் உங்களுக்குச் சந்தோஷப்படுத்தாமற் போய்விடுவோமா? நாங்களும் புதுகுடித்தனம், உங்களுக்கு எல்லாந்தெரியும். தாங்கள் இவ்வேழைகளின்மீது கிருபைவைத்து எங்களைமாத்திரம் கடைத்

தேற்றிவைப்பதைப் பாருங்கள் தங்களிஷ்டப்படி சந்தோஷகரமாகும்படி உங்களுக்கு திருப்திகரஞ் செய்விக்கத் தடையில்லை இனி உங்கள் வேலைதான். உங்களையே நம்பியிருக்கிறேனென்றாள்.

தளுக்குதங்கம்:—சுவாமிகளே! நீங்கள் எங்களுக்கு உபகாரஞ்செய்யும்பக்ஷத்தில் நாங்கள் உங்களை மறக்கப்போகிறோமா? எல்லாம் அம்மாள் நடப்பிப்பாள். நீங்கள் ஐந்துமணிக்கு இங்கு வருவது நிச்சயந்தானென, ஐயா—அதற்கென்ன தடையா? நீங்களும் ஜாக்கிரதையாயிருங்கள் இவனொ சுறவற்பசு, எவ்வளவு கறந்தாலும் கறக்கலாம். என்பேரிலும் உனக்குக் கியாபகமிருக்கட்டும். அவன் வந்தபிறகு மற்றதையெல்லாம் பேசி முடிவுசெய்துக்கொள்ளுங்களென்றகன்றார்.

வெங்கடராமையர்:—மாலை நாலு மணிக்கு துரைரங்கப்பிள்ளையிடஞ் செல்கையில், அவர் ஐயரை வெகு பக்ஷமாய் உபசரித்துட்காரச்சொல்லி, தானும் புறப்பட வெகு டம்பாகாரமாய் உடுத்திக்கொண்டு அதிக சளுக்காய் அவர்கள் தளுக்குக்கேற்றாப்போல சிங்காரித்து மாப்பிள்ளைராயனைய் ஐயரை அழைத்துக்கொண்டு தான் கோர்ச்சு வண்டியில் இருவரும் ஏறிக்கொண்டு புறப்பட்டுப்போய் தளுக்குதங்கம் வீட்டண்டை வண்டியைவிட்டிறங்கி உட்பிரவேசித்தார்கள்.

தாய்க்கிழவி:—துரை ரங்கப்பிள்ளையும் ஐயரும் வந்ததைக்கண்டு அவர்களை நாற்காலியின்மீதுட்காரச் சொல்லி வெகு பக்ஷமாய் உபசரித்து க்ஷேமங்களை விசாரித்து ஐயரே! என்ன சமாச்சாரம் தாங்கள் வந்த

காரணத்தைச் சொல்லெனக்கேட்க, ஐயர் இந்தப் பிரபு நல்லகுணஸ்தர், அதிலுஞ் செல்வந்தர், அவர் தங்கள் புத்திரிக்கேற்ற தாரதம்மியமுடையவர், அவர் விஷயத்தில் தங்களுக்கோர் குறைவுமில்லை. இதைப் பற்றி இனியாகும் காரியத்தைப்பேசி முடிவுசெய்துக் கொண்டு வேலையை முடியுங்களென்று சொன்னார்,

தாய்க்கிழவி:—என்ன ஐயரே! நமது மருமகப் பிள்ளை ஒன்றும் பேசாமற் சும்மாயிருப்பதைப் பார்த்தால் எங்கள்மீது கோபமிருக்கிறதென, துரைரங்கப் பிள்ளை அதெல்லாம் ஒன்றுமில்லை. எல்லாத்துக்கும் ஐயரிருக்கிறாரென யான் சும்மாயிருக்கிறேனென, ஐயர்-என்னசுந்தரம் நேக்கும் பொழுதாய்விடுகிறது. இனி ஆகவேண்டிய காரியங்களைப் பாருங்களென, இவள் இதோ வருகிறேனென் றுள்ளேபோய்விட, ஐயர்—என்னதங்கம் உள்ளேதானிருக்கிறாய் பிள்ளையவர்களுக்குத் தாம்பூலங்கொண்டு வந்து தாருமென்றார்.

தளுக்குதங்கம்:—தானோர் தட்டில் வாசனைத் திரவியங்கள் கலந்த தாம்பூலங்கொண்டுவந்து கொடுக்கையில் அதைத் தாங்களிருவருமே போட்டுக் கொண்டு அவளது சொகுசைக்கண்டு மயங்கினார்கள். அவ்வேளை தாய்க்கிழவி வந்து ஐயரே! தங்களிஷ்டப்படி நடப்பதற்கி யாதொரு தடையில்லை. ஆனால் நமது தங்கத்துக்கு சாந்திமுகூர்த்தம் நடப்பிப்பதற்கும், புதுசோபனஞ் செய்விப்பதறகும் அப்படி இப்படிப்பார்த்துக் கிள்ளிதரித்தாலும் நூறு

வாசனுக்குமேற் செல்லுகின்றது. அதை தயைசெய் தால் உடனே யாவும் நடந்தேறிவிடுகிறதென்றாள்.

துரைரங்கப்பிள்ளை:—ஐயரே! நானே காலையிற் றருகிறேன். மறுநாள் குருவாரத்தன்று அவர்களிஷ் டம்போல் யாவும் நடத்திடட்டும் நீங்களும் அவர் களுக்குக் கொஞ்சம் சகாயமாயிரும் என, தங்கத் தை யழைத்து ஒரு 20-ரூபா நோட்டைக்கொடுத்து இப்போதுன் செலவுக்கு வைத்துக்கொள் நாங்கள் போய்வருகிறோமென, தங்கம்—பிரபுவே தாங்கள் நாளை அவசியம் வந்து போங்களென்று மெத்தவும் விசுவாசமாய் தளுக்குசெய்து அவனை அனுப்பி வைத்தாள்.

தாய்க்கிழவி:—தன் மகளை நோக்கி ஐயர் நல்ல ஆளையத்தான் பிடித்துவந்தார் இனி நமக்குக் குறை யில்லை. அவனோ சீமான் நமக்கு நல்லகாலந்தான். நீயும் நான் கற்பித்துள்ள போதனைகளின்படி நடித்து பணம்பறிப்பதே பசந்து. நாம காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டும். அப்பால் வாவென்றால் வராது. நீயோ யாதொன்றிலும் ஜாக்கிரதையாயிருந் தால்மாத்திரம் நன்மையடையலாம். எவ்விஷயத்தி லும் நாலுகாசு பறிப்பதைப்பாரென்றாள்.

தளுக்கு தங்கம்:—அடி அம்மா தாயே! நாம் கோரியபடி நல்ல சீமானைப்பார்த்துதான் ஐயர் கொண்டுவந்தார் பரவாயில்லை. நீ இனி நடக்கவேண் டிய விஷயத்தை அச்சாம்போச்சாவென்று முடித்து விடும். வீண்செலவு ஜம்பமொன்றும் வேண்டாம். பணத்தைத் தாறுமாறாக்காதே யாவும் சிக்கனமாய்

நிதானித்து நடத்துமென்று தன்தாயிட முரைக்க, அவள் அப்படியே ஆகட்டும் எனக்கெல்லாந் தெரியுமென மகா சந்தோஷகரமாய் மனமகிழ்ந்திருந்தார்கள்.

துரை ரங்கப்பிள்ளை:—மறுநாட்காலையில் தனியே வந்து தாய்க்கிழவியைக்கண்டு மெத்தவுங் கனிகரமாய்ப்பேசி, அவள் கையில் முந்நூற்றைம்பதுரூபாய் சரியாகக்கொடுத்து இனி உங்கள்வேலைதான். வாங்குஞ் செலவுகளை இன்றைக்கே யாவுஞ்சித்தப்படுத்தி வைத்துக்கொண்டு நாளையதினம் எல்லாச்சடங்குகளையும் கிரமப்படி நடத்தி எங்களிருவருக்கும் கூட்டுறவு செய்துவிடுங்கள், எதோ தங்கம் காணோம் எங்கே போயிருக்கின்றனள்.

தளுக்குதங்கம்:—என்னுங்கோ சீமானே! என்று வந்து ஐயர் வரவில்லையோவென, இவன் அவருக்கெத்தனையோவேலை அடிக்கடி வரக்கூடியவரா? அது இருக்கட்டும் பெரியம்மாளிடம் அந்த தொகையைக் கொடுத்திருக்கிறேன். அதை எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படி கிரமப்படி நடத்தி நாளைராவிக்கு படுக்கையறை ஜோடித்து கட்டிலலங்கரித்து புதுசோபனஞ் செய்வதற்குப் பாருங்கள்.

தாய்க்கிழவி:—தங்களுக்கு வேண்டியதனைத்துஞ் சவதரித்து மறுநாள் தன் மகளுக்குச் செய்யவேண்டிய சடங்குகளனைத்துஞ்செய்து வந்தவர்களனைவர்க்கும் போஜனமுஞ்செய்வித்து அன்றிரவு படுக்கையறை ஜோடித்து சப்பிரகூடமஞ்சமு மலங்கரித்து யாவும் மகாசம்பிரமமாய்ச் செலவுசெய்து அங்கு

வைக்கவேண்டிய பால்பழ மிட்டாய் பலகாரம் தாம்பூலம் புஷ்பம் பரிமளத்திரவியம் பந்நீர் முதலியவைகளை உன்னதமாய்வைத்து யாவருஞ்சேர்ந்து துரைரங்கப்பிள்ளையையும், தளுக்குதங்கத்தையும் அப்பள்ளியறையினுள்ளே சேர்த்துவிட்டாள்.

துரைரங்கப்பிள்ளை:—தானும் தன் மனைவியும் மஞ்சத்தின் மீதிருந்து கொஞ்சிக்குலாவி சரசங்கள் செய்து பூச்செண்டுவிளையாடி அங்குள்ள பக்ஷணங்களாகிய தின்பண்டங்களையுண்டு சந்தோஷகரமாய் இருவரும் தழுவிக்கூடிச் சேர்ந்தணைந்து மதனலீலைகள்புரிந்து ரதியு மன்மதனும்போல சுகபோகவின்பத்தை யனுபவித்து நெடுநேரம் இணைபிரியாமல் சில விஷயங்களைப் பேசிக்கொண்டிருந்து நித்திரைசெய்தார்கள். மறுநாள் வெடிகாலையில் நித்திரை தெளிந்தெழுந்திருந்து தனது வேலையைப் பார்க்கையில், துரை ரங்கப்பிள்ளையும் எழுந்து தனதிருப்பிடஞ்சென்றனன். தாய்க்கிழவி தன் மகளைத்தழுவி உபசரித்து அவளுக்கமுதுபடைத்து பரியாற உண்ணவைத்து இவ்விருவரும் சேர்ந்து வந்தவனிடம் இனிக்காசைப்பறிக்கும் தந்திரோபாயங்களை பலவாறு யோசனைசெய்துகொண்டு அப்பால் ஆகவெண்டிய காரியங்களைச் செய்திருந்தார்கள்.

மறுநாள் ராத்திரி வருகையில், முன்போல மூன்றுநாளும் படுக்கையறை ஜோடித்து கட்டிலலங்கரித்து சகல தின்பண்டங்களையும் வைத்து இவ்விருவரையும் உட்செல்ல வைத்துவந்ததில், இவர்கள் தங்களிஷ்டகாமியார்த்தங்களை நிறைவேற்றிகொண்டு

மகா ஷோக்கில் இவர்களிருப்பதில், இவன் தகப்பன் கலியாண சுந்தரம்பிள்ளை சம்பாதித்துவைத்திருந்த கோடிரூபாயும் குசுவாய் அர்த்தநாசனஞ்செய்ய ஆளாகினான்.

தளுக்குதங்கம்:—துரை ரங்கப்பிள்ளையிடம்கூடிக் குலாவிச் சேர்ந்தணைந்து இருவரும் ஒருமித்து சந்தோஷித்திருக்கையில், இவள் தனக்குவேண்டிய நகைகளனைத்தும் செட்டாய் வாங்கிக்கொடுக்கும்படியாய் அவனைக்கெஞ்சிப் பிணங்கிச் சிணுங்குகையில், அவன் டம்பத்திற்காகிலும் அதுகளை வாங்கிக்கொடுத்தான். அதை வாங்கிப் போட்டுக்கொண்டு தளுக்கு தங்கம் சளுக்குசெய்துக் குலுக்குவதில், மகா வலுக்காரக்காரியாய்ப் பலுக்கிக்கொண்டிருந்தாள்.

தாய்க்கிழவி:—இவர்கள் இருவரும் இப்படிச் சில நாளிருக்கையில், தான் ஒருநாள் இவனை மடிப்புமோசஞ்செய்து வஞ்சிக்க அவன் வரும்வேளையில் தனக்குக் குளிர்காச்சல் தலைநோய் என்பதாய் துணி கம்பளிகளைவாறி தன்மேற் போர்த்துக்கொண்டு உஉஊ, அஅஆ! வென்பதாய் மூலையிற்படுத்துக் கொண்டு உபத்திரவப்படுகையில், தளுக்குதங்கம் அவ்வேளையில் இவளும் தூக்கித்திருக்க இதைக்கண்ட துரை ரங்கப்பிள்ளை அவனுந் தாபந்தரியப்பட்டு சேர்ந்திருக்கையில் இவர்களுக்குக்சரியான பாசாங்குக்கேற்ற பரலோபியாகிய தர்மலிங்க வைத்தியரை அழைத்துக்கொண்டு வாவென்று ளனுப்ப, அவர் அவ்வைத்தியனை இவர்கள் பேரைச் சொல்லி அழைத்துவரச் சொன்னதாய்த் தெரிவிக்கையில்

அவன் இதுவுமொரு கர்மந்தான் இழவுக்குப்போனாலும் ஒருநாறுட்டுப் புகையிலையுண்டு அதற்கும் வழியில்லாதென்டம் போகாமற்போனாலும் சரியல்லவென்றா புறப்பட்டான்.

தர்மலிங்க வைத்தியர்:—விருத்தராகையால் தான் தத்திக்கெட்டுத் தடுமாறி வீட்டினுள் நுழைந்தார்.

தளுக்குரங்கம்:—ஐயா வைத்தியரே! அம்மாளுக்கு இரண்டொருநாள் குளிர்காய்ச்சல் தலைநோய்க் கண்டு ஒருமாதிரியா யிருந்தாள். இன்றையதினம் என்னமோ மெத்தவும் பித்தம் பிளத்த அதிகரித்து பெருமூச்சுவிட்டுப் புரளுகிறாள். ஆகையால் அம்மா பிழைப்பாளா? பிழைக்கமாட்டாளா? அதை நன்றாய் அம்மாள்கையைப் பிடித்துப்பார்த்து சரியாய்ச் சொல்லுங்கள் அம்மாள் போய்விட்டாள, நான் அரைக்ஷணம் நிற்கேன், என் பிராணனை உடனே விட்டுவிடுவேன், அதற்குச் சந்தேகமில்லை எனக்குத் தைரியப்படச்சொல்லும்.

துரை ரங்கப்பிள்ளை:—வைத்தியரே! நீங்கள் முன்னே அந்தம்மாள் கையைப்பார்த்து அதற்குத் தக்க மருந்தை வையுங்கள் உங்களுக்கு வேண்டியதைத் தருகிறேன நீர் சந்தேகப்படவேண்டாமென, வைத்தியர் அவன் கையைப்பார்த்து தன் உளவுமாருட்டம் கையிற்தெரிந்துகொண்டு, அவன் ஐயா! இந்தம்மாளுக்கு இப்போது பித்தாதிகரித்து ஜன்னி பிறந்திருக்கின்றது அதினாற்றான் இக்குணம் அமைந்திருக்கின்றது. இதைத் திருப்புவது கடினம் தாங்கள மருந்துகொள்விற்கு ஐம்பது ரூபாயும் எனக்கு நூறு

ரூபாயும் கொடுக்கிறதாயிருந்தால் அதற்குத்தக்க பூபதிவைத்து லகுவுபடுத்துகிறேன் இல்லாவிட்டால் என்னுலாகாதென, அவன் அப்படியே தருகிறேன் பாரென்ருன்.

தர்மலிங்க வைத்தியர்:—அவன் எவ்வளவு கொடுத்தபோதிலும் இந்தவஞ்சகமுண்டைகள் தான் வாயிற் போட்டுக்கொள்ளப் போகிருர்கள். நமக்கு ஒரு ரூபாய்க்கு பஞ்சமில்லையெனக்கருதி, தான் நாலைந்து கட்டுக்களை தெண்டத்துக் கொவ்வொரு வுரையுரைத்து அதைநாக்கில் நக்கிவிடச்சொல்லி தான் போய் நாளை காலையில்வருவதாய் போய்விட்டான். மற்றவர் தாய்க்கிழவி பிழைப்பதற்கு பல தெய்வங்களுக்கும் அனந்தபிரார்த்தனைச் செய்துக்கொண்டு வருத்தப்பட்டிருந்தனர். தளுக்குதங்கம் இதற்குள் மற்ெருரு மந்திரக்காரனை வரவழைத்து விபூதிபிடித்துப் பார்க்கச்சொன்ஞள்.

மந்திரக்காரன்.-இவர்கள் சூதை நன்ருய் அறிந்தவனுய்உங்களுக்குவிரோதி சூனியம்வைத்திருக்கிருன். அது இன்னும் ஒன்பதுநாளையிற்கொன்றுவிடும் இது குனிர்காச்சலல்ல நாளுக்குநாள் தாஸ்திபட்டு கனவு கண்டு வாய்பினத்தி பாயிற்படுக்கவொட்டாமற் செய்கிறதல்லவா? இதக்கிரண்டு கழிப்பெடுக்கவேண்டியது ஒவ்வொரு கழிப்பிற்கும் முப்பலிகாவு கொடுக்க வேண்டும். அதற்குச் சுமார் பத்துவிராகன்பிடிக்கும் அப்படிச்செய்ய இஷ்டமிருந்தால் நான் இந்தம்மாளை லகுவுபடுத்தி இப்படிச்செய்த உங்கள் விரோதியை இவ்விதஞ் செய்துவைக்கிறேன். இதில் உயிருக்குத்

துவிந்து செய்கிறதில்லை; மெத்தவும் கஷ்டமிருக்கிறது. இதற்காக எனக்கு வேறே நூறுரூபாய் கொடுக்கிறதாயிருந்தால் இவ்வேலையை முடிக்கிறேனென்றான்.

துரை ரங்கப்பிள்ளை:—தளுக்குதங்கமிடம் தங்களூர்க்குக் கையிருப்பாய் ஸ்டாக்செய்துவைத்திருக்கும் ரூபாய் இரண்டாயிரத்தில் முதல் கழிப்பிற்குப் பதினைந்துரூபாயும், இரண்டாங்கழிப்பிற்கு பதினைந்து ரூபாயும் கொடுக்கும்படிச்சொல்லி மாந்திரீகனைப் பார்த்து அப்பா! நீ நாளை காலையில்வா இவர்கள் பணங்கொடுப்பார்கள் அதை வாங்கிக்கொண்டு சீக்கிரத்தில் சுகுவுபடுத்திவிடுமென்றவனை அனுப்பிவிட்டு இவர்கள் கொஞ்சம்நித்திரை செய்திருந்தனர்.

தாய்க்கிழவி அங்கு கொஞ்சநேரம் செய்த தளுக்கினால் சுமார் மூந்நூறு ரூபாய்வரையிற் பறித்துக் கொண்டார்கள். அப்பால் கிழவியும் இரண்டொரு நாளைக்குள் தனக்கு நேர்ந்த நோய்போய் குணியநதுவிலந்தபோய் சுகுணப்பட்டு செக்குலக்கையைப்போல எழுந்து திரியலானாள். அந்த தடிமாப்பிள்ளையும் வெகு சந்தோஷப்பட்டு அடி தங்கம பார்த்தையா பணத்தை இறைத்துப் பிணத்தை யெழுப்பினேன். பணமில்லாதவர் பிணமே யென்றான்.

தளுக்குதங்கம்:—ஆ! என் கண்ணுளா! நாங்கள் செய்த புண்ணியந்தான். தாங்கள் வந்தமைத்தது· ங்களே இல்லாவிடின் அனியாயமாய் யாங்கள் மடியச் சந்தேகமில்லை. நான் உங்களை என்னமோ வென்று பார்த்தேன். உங்களுடைய தைரியமும்,

செலவு செய்தீரமும், மனுஷியாள்மேல் பக்ஷமும், வேறொரு ஊளை மூஞ்சிக்கு வாவென்றாலும் வருமா? நீங்களல்லவோ பெரிய கனவான், தனவான், சீமான் பிரபு, உங்களை மெத்தவும் மெச்சினேன்.

துரை ரங்கப்பிள்ளை:—இவள் நம்மை இவ்வளவு சிலாகித்துப் புகழ்ந்து கொண்டாடினளென்னும் பெருமகிழ்ச்சியை யடைந்தவனாய் அடி என் கண்ணுட்டி! நான் எத்தனைபேர்களுக்கு இப்படிக்கெல்லாஞ் செலவு செய்தும், அந்த பிளடிராஸ்கல்ஸ்களெல்லாம், இன்னம் பிடுங்கித் தின்பதைத்தான் பார்த்தார்கள். அவர்களில் யாரும் உன்னைப்போல் புகழ்ந்து சொன்னவரை யானறியேன். உன் விஷயத்தில் எனக்கு என்ன செலவானாலும் லட்சியமில்லை யென்றான்.

தாய்க் கிழவி:—தொந்தார்த்தமாய் இதற்குள் துரை ரங்கப்பிள்ளையை தசக்கி மசக்கி தம்பி என்னருமை மருகப்பிள்ளையே! உனக்கொரு பெரிய செலவுவந்திருக்கிறது அது என்னெனில், நம்ம தங்கத்தின் தங்கை ஆளாகிவிட்டாள் என்றாள். இவன் மகா சந்தோஷமென, தங்கம் - போவம்மா! இது அவர்க்கொரு வரவாசெலவா? இதை நிறைவேற்ற அவராலாகாதா வென்றாள். அவள் உங்களுக்குள்ளே இருக்கிற பெருமை எனக்கெவ்விதந் தெரியுமென்றகன்றாள்.

தளுக்கு தங்கம்:—ஆமாம் அம்மாள் சொன்னதைப்போல் தங்கச்சி மரகதம் இன்றையதினம் காலை ஏழுமணிக்கு புஷ்பவதியாயினள். இதற்கெப்படி பார்த்தாலும் சுமார் ஐந்நூறு ரூபாய்க்குமேல் செல

வாகும் அதிலும் நீங்களொருத்தர் ஏஜண்டாயிருப்பதினாலே பின்னும் இருநூறு முந்நூறு ஏறினாலும் ஏறும் என்றாள். துரை ரங்கப்பிள்ளை-ஆனால் அதை விசேஷமாகத்தான் நடத்தவேண்டும். அதற்கு நம்ம கையிருப்பில் எடுத்துக்கொள்ளென்று சொன்னான்.

தளுக்குதங்கம்:-பிள்ளையவர்கள் இப்படிச் சொல்லவும், நாம் தேடப்போன திரவியம் காலிற்றெம்பட்டதுபோல் இவன் கிடைத்ததுந் தெய்வ சங்கல்பந்தான் என மனதிலெண்ணியவளாய், ஐயோ இது என்னாங்கோ நமது கையிருப்பைக்கரைத்து விட்டால் தங்களுக்கு நின்னாப்போல ஏதாவது வேண்டுமானால் நானென்ன செய்வேன். அதென்னமோ அதிலெடுத்துக்கொடுக்கமாட்டேன். அது உன்னிஷ்டம் அம்மாளிஷ்டமென்றுரைத்தாள்.

தாய்க்கிழவி:—அதன்பின் நாலைந்து நாளைக்கெல்லாம மருகனைப்பார்த்து என்னா தம்பி உன் மைத்துனிச்சியை விட்டிற்கழைத்துக்கொள்ள மூன்றுநாளிருக்கிறதே நாம் சும்மாயிருந்தால் எப்படி? நான் தங்கத்தைக்கேட்டால் தன்னைக்கேளென்றாள். நான் ஒண்டிக்காரிச எதற்கென்று ஆடுவேன். யாவு முன் ஜாக்கிரதையாய் தயார்செய்து வைத்தாலல்லவா நமக்கு நல்லதென, இவன் அந்தப்பணத்தில் வேண்டியதை யெடுத்துக்கொடும் அதைத் தருகிறேனென்றான்.

தளுக்குதங்கம்:—ஆமாம் அதில் எவ்வளவு எடுத்துக்கொடுக்கிறது அதைச் சொல்லெனக்கேட்டமையில், அவன் எழுநூறு ரூபாய் கொடும் அதை மறு

படியும் நான் உன்னிடங்கொடுக்கிறேன். நீ அதற்கு வருத்தப்படவேண்டாமென, அவளும் அப்படியே கையிருப்புத் தொகையில் எழுநூறு ரூபாய் எண்ணி தனது தாயினிடம் கொடுத்து இதிலேயே எல்லாச் செலவுகளையும் பார்த்துக்கொள்ளென்று மேலுக்குத் திட்டஞ்செய்தாள்.

துரை ரங்கப்பிள்ளை இந்த கேளிவிலாசத்திலிருக்க, அவன் றந்தை கலியாணசுந்தரம் பிள்ளை தம் புதல்வன் தாசிவேசிகள் வீடேறி தனது திரவியத்தை அவர்களுக்குப் பலவிதத்திலும் தாரைவார்க்கின்றனனெனக் கேள்வியுற்று, அதுவே கிலிபட்டு நோயாய்ச் சம்பவித்து பாயும் படுகேடாய் வீழ்ந்திருந்தவன் பத்து நாளைக்கெல்லாம் தான் பரமபதம் போய்ச் சேர்ந்தான். உடனே தன் புத்திரன் தந்தையை மகா சம்பிரமத்துடன் டம்பாகாரமாய்த் தகனஞ்செய்து கருமாதி முதல் முடித்துவிட்டான்.

தாய்க்கிழவி:—தம்மிளைய புதல்வியாகிய மரகதத்தை வீட்டிற் கழைத்துக்கொண்டு சகல சடங்குகளையுஞ் செய்து அன்றிராத்திரி கச்சேரி வைத்து அது முதல் ஏழுநாள் பலவித வேஷங்களைப்போட்டு வேடிக்கைகளை நடத்திவந்ததில், யாவரும் துரை ரங்கப்பிள்ளையை மெச்சிக்கொண்டாடினார்கள். அது விஷயத்தில் இவனுக்கும் வெகு சந்தோஷமாயிருந்தமையால், அச்சமயத்தில் ஐந்நூறு ரூபாய்க்குமேல் கிரகித்ததில், இவ்வைகளனைத்தும் தங்கள் மாயமருந்தின் மகத்துவமென மதித்தார்கள்.

தளுக்குதங்கம்:—அதற்கப்பால் சிலநாள் பொறுத்து தம்மிடமிருந்த பொம்மைகளுக்கு கலியாணஞ் செய்யவேண்டு மென்பதைப்பற்றிக் கருதியவளாய் தன் நாயகனைப்பார்த்து, நாயகா! நானொரு எண்ணங்கொண்டிருக்கிறேன் அதை நிறைவேற்றவேண்டும். அது என்னவெனில், நமது பொம்மைகள் ஆண் பெண்ணிரண்டுக்குங் கலியாணஞ் செய்விக்கவேண்டும். அதற்கு இருநூற்றைம்பது ரூபா யிருந்தால் போதுமானது. அதிலும் விசேஷமாய் நடத்த வேண்டுமெனில் அது உமதிஷ்டம். அப்படிச் செய்தால்தான் நமக்குக் கௌரவம். ஒன்றுமில்லை கேவலம் ஒரு தாசியை வைத்துக்கொண்டு கமலாக்ஷி யென்பவள் தான் பொம்மைக்கலியாணஞ் செய்து நம்மையெல்லாம் அழைத்து விருந்து செய்து இரவிற் கச்சேரியும் வைத்து எவ்வளவு கனப்பட்டனளென்றாள்.

துரைரங்கப்பிள்ளை:—ஆ! ஆ! இவர்கள் பேசும் வார்த்தையே வணக்கம். இவர்கள்செய்வதே மரியாதை யென மதித்து, ஆ என் கண்ணே! நீ பொம்மைக்கலியாணஞ் செய்து விளையாடவேண்டுமா? அதற்கொரு ஆட்டபாட்ட கச்சேரியும் வைக்கவேண்டுமா? அவைகளை சோபனமுஞ் செய்யப் படுக்கவைத்தால் பிள்ளைபெறுமா? அப்படியானால் உன்னிஷ்டம்போல செய்யு மென்று உத்திரவு கொடுத்து அதையும் நடத்துமென்றான்.

# 3-ம் அத்தியாயம்.

உலகத்தில் அநேகமாய் புருஷர்கள் தம் சொந்த மனைவியரை விட்டு அயல்மனைக்குச் செல்லுவதற்கு அதி முக்கியமான காரணம் சில வுண்டு. அவை யாவையென இவ்வத்தியாயத்தில் எடுத்துப் பேசுவோம்.

தாசிகள்:—தங்கள் வச்சக்கார் தம்மிடம் வருகையில் தன் தோழி முதலிய மற்றவரை நோக்கி அடி சொர்ணம் பிள்ளையவர்கள் வந்தார். முன்னம் அவருக்கு காலலம்ப ஜலங்கொடுமென்று சொல்லி அவள் கொடுக்க தான் அலம்பிக்கொண்டு வந்துட்கார, இவள் தன் முந்தானையில் அவன் காலை நன்றாய்த் துடைத்து, ஆ! என்றனங்கோ! உங்களநியாயம் யாராத்திரியில் வருகிறீர்கள். எனக்குப் பயமாயிருக்கிறது. கொஞ்சம் பொழுதோடு வரக்கூடாதா? அப்படி வருகையில், எதாவது சொந்தரை நேர்ந்தால் யாருக்குச் சேதமென பரிதாபப்படுவார்கள்.

மனைவி:—தனது புருஷன் தம்மிடம் வீட்டிற்கு வருகையில், அம்மனைவி இவனைச் சட்டைபண்ணாமல் தன் வேலையைப்பார்த்துக்கொண்டிருக்கையில்,இவன் என்ன காலலம்ப ஜலங்கொண்டுவா வென, அவள் தண்ணீர் மொண்டுவந்து ஒரு கையினாற் கொடுத்து விட்டுப்போய்விட, தான் காலலம்பிக்கொண்டு உள் நுழைவது வழக்கம். அவள் இக்கூத்திக்கள்ளனைக்

கார மிளகாயை யரைத்துத் தடவாதவிடத்திற் றடவியதுபோலே தான். அதிலும் இவள் பேசுகையிலோ ஈயத்தைக்காய்ச்சி இழையவிட்டாற் போல எதிர்த்தெதிர்த்துக் கூடப்பேசித் திரிவதே இயற்கை.

தாசிகள்:—தன் வச்சக்காரன் கொஞ்சதூரம் போய் வந்தால் என்னுங்கோ பிள்ளையவர்களே! எங்கேபோய் வந்தீர்களென, இவன் நான் நாலைந்து நாழிகை வழிதூரம் போய்வந்தேனென, இவள்--ஆ! நீங்கள இப்படித்தான் வருத்தப்படப் போய்வருகிறது. தாங்கள் வண்டியின் மேலேறிச் சவாரிப் போய்வரக்கூடாதா? எத்தனைபோ நீங்கள் அலட்சியமாய்ச் செலவுபண்ணி விடுகிறீர்கள். இதென்ன ஒரு வரவா செலவா? உங்களுக்குக் கால்நோகாதா? யார்தான் பார்த்தாலென்ன சொல்வார்கள். சொற்பத்துக்கெல்லாம் இப்படி கணக்குப் பார்ப்பது சரியல்ல? எனக்கென்னமோ இவைகளைக்கேட்டால் பார்த்தால் என் மனசுக்கு மெத்தவும் வருத்தமாயிருக்கிறது. நானென்ன செய்வேனென்பாள்.

மனைவி:—இவன் கொஞ்சதூரம் போய்வருவதைக் கண்டால் இவள் தின்னவிட்டுப் போகக்கூடாதா? நானென்னேரமட்டுங் காத்துக்கொண்டிருப்பேன். உங்கொள்ளை இதுதானு இங்கெழுவிலே உழைக்கத்தான் பெண்பிறந்தேன், மற்றொரு சுகத்தையுங் காணேன். பிண்டாசோறு வேவிக்கிறதும், போடுகிறதும் தின்னுகிறதுமே ஒழிய, மற்றதொன்றும் அக்கரையில்லை. அவளவளிப்படித்தானு யிருக்கிறர்கள். என் தலைவிதி இப்படிக்காகவே பிரம்மா

எழுதி வைத்திருக்கிறுன். நான் இடுவாரைப்பார்த்து எங்கியழத்தான் எனக்கு காலமாச்சு யாராகிலும் பார்த்தால் காரிமுழிவார்களென்பாள்.

தாசிகள்:—ஓர் விசேஷ நாட்களில் தங்கள் வீட்டில் தெய்வம் தேவாதிகள் கும்பிடவும், உற்சவ காலங்களில் அந்தந்த கோயில்களுக்கு உல்லாசமாய்ப் போய்வரவும், இன்னு மற்றுமுள்ள விஷயங்கட்கு தன்னை வர்ணித்து தம் மனம்போல பணம் பறிக்கவும், விற்கவந்த நகைகளை தான் வாங்கி வைத்துக் கொண்டு தன்னிடங்காட்டி அதை வாங்கிக்கொடுக்கும்படிச் சொல்லித் தான் வாங்கிப் போட்டுக்கொள்ளுவதும், இப்படியே பணம்பறிக்கும் விஷயத்தில் முக்கியமாய் அதி உஷாராகவே பல யோசனை செய்து கொண்டேயிருப்பார்கள்.

மனைவி:—ஒரு நல்லநாள் தீயநாளில் தான் யாதொன்றுஞ்செய்ய ஆசையற்றவளாயும், ஒரு கோயில் குளம் உற்சவ முதலியதற்குப் போகவர தன் புருஷனுதவாதவனுயும், மற்றொரு விஷயங்களுக்கு வாதாடிக்கேட்டும், அது கைக்கு வராதிருப்பதைப்பற்றியும் யாதொரு காரியத்திற்கும் ஏக்கற்ற நாரி போக்கற்றவளாய், சதா துக்கசாகரத்தில் மூழ்கி துயரத்தையே மனதிட்கொண்டு தன் பிள்ளை குட்டிகளைக் காப்பாற்றும்படி தான் இமிசைபட்டு நல்லத்துக்கு நாவாசையற்று தன் புருஷனை ஏத்திப் பிடிங்கித் தின்னத்தெரியாமல் கொடுஞ்சூலியாய் ஒருமூலையில் கிடப்பாள்.

ஒரு புருஷன் இவர்களிருவர் செய்யும் இவ்வித உபசார சொற்பகட்டில் எவளை விரும்புவான்?

ஆதலினால் "விலைமகட்கழகு தன் மேனி மினுக்குதல்" என்றபடி தங்களை அதிநாகரிகமாய் ஆக்கிக்கொள்வதினாலும் தவிர புருஷர்களைத் தன்வசமாக்கும் சக்தி பெரும்பாலும் இவர்களிடத்தே குடிகொண்டிருப்பதாலும் இவர்களைக் கண்ட காமுகர் இவர்களடிபணிந்து எக்காலும் இவர்களுக்கு நல்ல பணிவிடைகளுஞ் செய்து பக்கத்திற் றுணையாயிருக்கும் பாடிகாவுகள் பலபேருண்டெனினும், அவர்களுக்கு இவளால் நடுராத்திரத்தில் நாட்டு துக்காணிகளையும் சம்பாதிக்கத் திறமையுண்டாகின்றனவாம். ஆகவே நமது தாசாரங்கப்பிள்ளையும் இவர்களிடம் சிக்கி சீரழிவது ஓர் ஆச்சரியமல்ல.

## நான்காவதத்தியாயம்.

நாய்க்கிழவி தருக்குசக்கம் இஷ்டப்படி பொய்மைக்கலியாணஞ் செய்யப்படுவதில், போகட சுந்தரங்கி குமாரன் செல்வ ராஜனுக்கு தன் தமக்கை குமாரத்தியாகிய சாரதம்பாளைக் கேட்டு நிச்சயார்த்தம்பண்ணி முகூர்த்தநாளிட்டு முஹுக்கால் பந்தக்கால்நட்டு கலியாணப்பந்தல்ஜோடித்து பராபவஹு ஆனிமீ 7உ சோமவாரம் பூர்வபக்ஷம், சப்தமிதிதி, உத்திராடநக்ஷத்திரம் உதையாதி நாழிகை 4-க்கு மேல் கடகலக்கினத்தில் கங்கணங்கட்டி மங்கிலியந் தரிப்பதாய் டிக்கட்டுபோட்டு யாவர்க்குந் தாம்பூலம் வைத்து அந்த லக்கினப்படி மங்கிலியந்தரித்து

சேஷையிட்டு பிள்ளைக்கும் பெண்ணுக்கும் ஆசீர் வாதம்செய்ததில் பிள்ளைவீட்டார்க்கு 123-8-0-ம், பெண் வீட்டார்க்கு 147-0-0-ரூபாயும் மொய்யெழு தியபின் மற்ற சடங்குகளையும் கிரமப்படி யாவுஞ் செய்து மூன்றும்நாள் கங்கணமவிழ்த்து ஊர்விருந்து யாவர்க்குஞ்செய்வித்து அப்பொம்மைகளுக்கு மருவு மூன்றுநாளிட்டு சாந்தி முகூர்த்தமும் நடத்தி பிள் ளைக்கும் பெண்ணுக்கும் மரியாதைகளுஞ் செய்து எல்லாச் சீதனங்களுங்கொடுத்து மகாசிறப்பாய் நடத்தியதில், யாவரும் மெச்சினர்கள். அக்கலியா ணத்தை மனுஷியாளுக்குச் செய்வதைப்போல் துரை ரங்கப்பிள்ளை முடித்துவைத்தனர்.

துரைரங்கப்பிள்ளை:—தன் தகப்பனர் காலஞ் சென்றதன்பின் தன்மனைவி மைந்தர் பந்துவர்க்கங் களைப் பறவாபண்ணுமல் தாசிவீட்டிற் றலைப்பிள்ளை யாயிருப்பதால், தனக்கேற்றிய மாயமருந் தீட்டின் வல்லயம் இவனை இப்படிக்கெல்லாம் ஆட்டிப்புடைக் கின்றது. இதில் தன்சொத்தனைத்தும் நாளாவட்டத் தில் கரைந்துகொண்டேபோக தானும் கைகொண்ட மட்டும் கௌரவத்திற்காணுலும் செலவழிக்கப் பால் மாறுமல் இடுப்புக் கட்டிக்கொண்டு திரிந்தான்.

தளுக்கு தங்கம்:—சிலநாள் பொறுத்து தன் தங் கையாகிய மரகதத்தை கோயிலில் முத்திரை போட வேண்டும். அதன்பின் கெச்சை கட்டவேண்டும். இது ஒரு செலவுவந்திருக்கிறது. இதற்கெப்படி பார்த்தாலும் ஐந்நூறு ரூபாய் பிடிக்கும் இதைப் பற்றி அம்மாள் தங்களிடம் ஒன்றுஞ் சொல்லவில்லை

யாவென, அவன் ஒன்றுமே சொல்லவில்லையென, ஆனால் அதற்கென்ன பார்க்கலாம். நீ ஒன்றுக்குஞ் சஞ்சலப்படாமலிரு எல்லாம் பெரியம்மாள் வந்து சொல்லி செய்து நிறைவேற்றுவார்களென்றான்.

தாய்க்கிழவி:—என்ன என்னைசக்கினிய மரு மகப்பிள்ளையே! உன் மைத்துனச்சி மரகதத்தை கோயிலில் முத்திரைபோடும்படி தொந்தரைசெய்கிறார்கள். அதோடுகூட கெச்சை கட்டுவிக்கவும் வேலையிருக்கின்றது. அதற்கு எங்கேயாகிலும் ஐந்நூறு அறுநூறு ரூபாய் பிடிக்கும். இதற்கெப்படி நீர் ஒரு சீமானையும், எங்கள் வீட்டிற்குத்தலைவனுடம் ஜெண்டாயிருப்பதால், உன்னையன்றி எங்களுக்காரிருக்கின்றார்கள். அதற்கெப்படியோ அப்படிச்செய்யும்.

துரை ரங்கப்பிள்ளை:— அப்படியானால் அதை நிறைவேற்றுவதற்கு தொகை எப்பொழுது வேண்டுமென்றான். இப்பொழுது கொடுத்தால்தான் நாம் வாங்கவேண்டியதையெல்லாம் முன்ஜாக்கிரதையாய்ச் சேகரஞ்செய்து வைத்துக்கொண்டு அவைகளை நடப்பிக்கலாமென, இவன் தளுக்குத் தங்கத்தினிடமிருக்கும் இருப்புத்தொகையில் ஐந்நூறுரூபாய் வாங்கிக்கொண்டு உங்கள் வேலைகளைச் சம்பிரமமாய் முடியுங்களென்று அவர்களுக்குச் சொன்னான்.

தளுக்குதங்கம்:—அவன் சொன்னபடியே அத்தொகையளிக்க அதையும் தங்களிஷ்டப்படி மறைத்து அவனுக்குபாத்திரம் அந்தப் பெண்ணை கோவில் முத்திரை போட்டுவித்ததாகவும், மற்றொருநாள் கெஜ்ஜை கட்டுவித்ததாகவும் தளுக்குபண்ணி கதைகட்டி

ஞர்கள். அதையவன் மெய்யென நம்பி வெகு கௌரவமாய் இவர்களைத் தங்கள்வீட்டுக் குலதெய்வமாயெண்ணி தன் சொத்துகளை அவர்கள் அபகரிப்பதைப்பற்றி கருதாதவனாயிருந்தான்.

தாய்க்கிழவி:—தங்களை யடுத்தவனைப் பேய்க் கழுதையாக்கித் தங்களுக்குப் பணிவிடை செய்ய நாய்போலக் காத்திருக்கவும், தாங்கள் கேட்டபடிக்கெல்லாம் தாராளமாய் திரவியத்தைக் கொடுக்கவும், மதியைமயக்கும் பெரிய வசிய யீடுமருந்தை அவனுக்கேற்றிவிடச் சொல்லியதில், தளுக்குதங்கம் அதை உடனே யெடுத்து பால்பழ மிட்டாய் பலகாரம் கறி பதார்த்த முதலியதில் தாட்டியாய் மூன்றுநாள் பாச்சிவிட்டு தான் சந்தோஷமாயிருந்தாள்.

பணிவிடையாவது — கேவலமான வர்களுக்கு வெண்பட்டிற்கட்டியிருக்கும் மருந்தும், தனவந்தருக்கு சிவப்புபட்டிற் கட்டியிருக்கும் மருந்தும் ஏற்றுவதில், அவை உள்ளுக்கேறியதே இவர்கள் வீட்டில் வளர்க்கும் வேட்டைநாய்கள்போல தங்கள்மேல் ஏக்கங்கொண்டு தயங்கியிருப்பரென்பதுண்மை. அதிற் கேவலமானவர்களெனில், முந்தித் தந்தனத்தை இவர்கட்குத் தாரைவார்தது பராரியாய்விட்டதிற் றம்பாச மறவாமற் பணிவிடை செய்திருப்பவர். தனவந்தரெனில், கையிருப்பாளராய் இனி இவர்கட்குத் தாரை வார்க்கப்படுவர் எனக்கருத்தாம்.

கேவலஸ்தர்:—தங்கள் கைவேலைகளைச்செய்தும், கடைகளுக்கு போய்வருகிறதும், மற்றவரிடந் தூது சொல்வதற்கும், பிறரைக் கூட்டி வைப்பதற்கும் இவ்

விடத்திற் காலங்கழித்து வெகு டம்பமாய் உலாவித் திரிந்திருப்பவராம். இத்தன்மையோர் டாபராயிருந்து பிறரை தங்களிடம் அழைத்துவருகையில், வந்தவரிவனைமெச்ச இவளை யவன் வைத்திருப்பதாக டாபரை நீ இன்னமும் காலஹரணஞ்செய்வது எனக்கு வருத்தமாயிருக்கிறது. எப்போதும் அப்படிதான் செய்கிறாய். உம்மாலே நான் ஒரு கோயில் குளம் தீர்த்தம் திருவிழாய் எல்லாம் போவதை மறந்தேன். புண்ணியவான் நீ எனக்கென்று எங்கேயிருந்துவந்தையோ நீ கொடுக்கிற பதினைந்து ரூபாயில் எல்லாம் ஆய்விடுமா? இதெல்லாம் என்தலை விதியென ரெம்பிக்கச் சொல்லுவாள்.

தனவந்தர்:—தன்கை சொத்தனைத்தும் தடபுடலாய்ச் செலவு செய்யும் டம்பாச்சாரிகள் தாசிவேசிகட்கு தலைப்பிள்ளைகளாய்ப் பிறந்து தன் மனைவி மைந்தர் மற்றுமுள்ள சுற்றத்தாரையுமறந்து அத்தகைய படுமோசமாதர்கள் பாதம்பணிந்து எக்காலுமிப்படியே யிருக்குமென்று இலவுகாத்த கிள்ளையைப்போல் எங்கி நின்று கேவல ஸ்திதிக்கு வந்துவிடுகின்றனர். இதில் எரிகிற வீட்டிற் பிடுங்குகிற கொள்ளி பாம்பென வஞ்சிக்கும் விலைமாதரிடமே பாவும் சேர்ந்து விடுகின்றமையால், அவர்கள் நடுவாக்திரக் கொள்ளைபிடுகின்றனர். இதில் இவளுக்கு லாபம் அவனுக்கு நஷ்டமென அப்பப்போது தனத்தை யழிக்கின்றன வெனப்படும்.

துரைரங்கப்பிள்ளை:—இம் மருந்தேறிய வுடனே புண்ணியும் அதிக மும்மரமாய் இவர்கள் சொல்லைத்

தடுக்காது ஏமாளமாய் தம்மனையிற் செல்வதற்கும் தடுமாற்றமாய் இங்கேயே சுற்றுக் காலிடலாயினன். இவன் சொத்தனைத்தும் விரைவிற் பறித்துக்கொண்டு விலக்குவதற்கு இதுதான் சமயமென, இனி நகையனைத்தும் பத்திரப்படுத்திவிட்டுக் கள்ளரடித்துக்கொண்டு போயினரென்று தந்திரஞ்செய்து அதற்குப் பதில் நகைகளைக் கிரகிப்பதைப் பாரென்று மகளை இழிவுகுத்தி சீகொட்டினாள்.

தளுங்குதங்கம்:—ஒருநாள் இவன் வருகாத இராத்திரி தனது நகைநட்டனைத்தும் பெட்டியிற் பத்திரமாய வைத்துக்கொண்டு அவைகளைத் திருடர்கொண்டுபோய் விட்டார்களென்பதாய் ஓர் பெரும்பாசாங்கு போட்டுக்கொண்டு அவன் வரும்வேளையில் இவள் துக்கப்பட்டு புலம்பிக்கொண்டிருக்கையில், தாய்க்கிழவி இவன் வருந்தருணம் பார்த்திருந்து கிழவி மகள் வருத்தப்படுபவளுக்கு இவள் மெய்யாய் மன்னுப்புசொல்லி மனந்தேற்றுவதுபோல், அதற்கேண்டியம்மா அழுகிறாய் அவன் நாசமாய்ப்போக உனக்கென்று எங்கிருந்து வந்தான். உன் பாவத்திலே நின்றானே அவன் விளங்கப்போகிறானா? நீ வருத்தப்படாதே அதுபோனால் உன் ஜாங்தேபோச்சுது. உன் ஆசைக்கண்ணாளன் வரட்டும் இதை யெல்லாஞ் சொல்லி உனக்கு வேண்டிய நகைகளைப் பண்ணிப் போடச்சொல்கிறேன். அந்த புண்ணியவான் இராத்திரி வராதிருந்ததினா லல்லவா? இந்த வகைமோசம் நேர்ந்தது. இதெல்லாம் யாரோ உளவாளிகள் செய்த வேலையே. சீ அதுகெட்டது நீ தைரியம் விடாதே,

உன் மாப்பிள்ளைக்கு இதென்ன வரவா செலவா? சீமா ஞெச்சுதே உனக்கென்ன குறைவு பயப்படாதே யென்று அவன் கேட்கத் தேறுதலை சொல்லிக்கொண் டிருந்தாள்.

தாய்க்கிழவி:—இவ்வா றுரைக்கின்றதை துரை ரங்கப்பிள்ளை கொஞ்சநேரம் தலைக்கடையில்நின்று கேட்டுக்கொண்டிருந்து தன்னைப் புகழ்ந்துசொல்லி யதையும், தன் மகளைச் சமாதானப்படுத்தியதையும் காதுற்றுக்கேட்டு உள்ளே வருகையில், அவளிடம் கிழவியானவள் மெய்ப்படப் பிரியமாயுரைத்து பரி தாபப் படுகையில், அவன் தளுக்குதங்கத்தைக் கூடிய மட்டும் சமாதானப்படுத்தி அவள் முகத்தை தன் துளியாற் றுடைத்து தலைமயிரைக் கோதிக்கட்டி அதுபோனாற்போகுது நான் வேறே உனக்கு எல்லா நகைகளும் வாங்கியோ அல்லது புதியதாய்ச்செய்தோ போடுகிறேன் நீ பயப்படவேண்டாம். உன் பீடை போய்விட்டது. அதைப்பற்றி விசனப்படாதே எழு ந்தி றென்றான்.

தளுக்குதங்கம் :—அவன்தேறுதலை சொல்லுகை யில், இவள் பின்னும் குலுங்கக்குலுங்கத் தேம்பி யழுது மெத்தவும் துக்கசாகரத்தினில் மூழ்கியிருப்ப வள் போலிருக்கையில், அவனை நீங்கள் என்ன சாப் பிட்டீர்களா இல்லையா? இங்கே போஜனஞ்செய்கி றீரோவென்று அவனை உபசரிக்கையில், அவனுக்கோ உச்சந்தலையில் ஒருமண்டலந் தேய்ந்ததால் ஜாடி யநு வாயிருந்தவை ஆலவட்டம் போலுமென்னணி பெண்ணே நான் சாப்பிட்டுதான்வந்தேன். நீபோய்

சாப்பிட்டுவா வருத்தப்படாதே யென்றுரைத் தனுப்பினன்.

தாய்க்கிழவி:—பார்த்தையாடி யம்மா! நான் சொன்ன தந்திரம் நீசெய்த மத்தளிப்பு அப்படிக்கில்லாவிட்டால், யார் அரைக்காசளிப்பர்? ஆகையால் காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும், கணவனுள்ளபோதே கண்டவரைச் சேரவேண்டும். இது தெரியாதா? இப்படிப் பிடுங்கினல்தான் நமக்குத் திரவியஞ்சேரும். லலிதமாய்க் கேட்டால் ஞாயமாய்க் கொடுப்பவரார்? இக்காலத்தில் சமுசாரிகளெல்லாம் தேவடியாளாய்விட்டார்கள், தேவடியாள்களுக்குப் பிழைப்பில்லாது கோச்சுமான் குசினிக்காரரைக்கொண்டு ஜட்காவண்டி யேறிக்கொண்டு போய் குத்தகையாய் துரைமார்களைக்கூடிக் கட்டியழுகிறார்கள். நமக்கிப்படி யார் கிடைக்கப்போகிறான் நமக்கும் நல்லகாலந்தான் இவன் வாய்த்தது. நாம் பூவைக்கசக்காமல் முகந்தால்மாத்திரம் மணமிருக்கும் கசக்கினல் என்னபலன் இவைகளையெல்லாம் கருத்தில் வைத்துக்கொண்டு பத்திரமாய்ப்பிழைநானிருப்பதென்ன நிச்சயமா? இது நிலையில்லாக் காயம் நீயோ விடைப்பெண் உனக்கு அனுபோகம் போராது பாவையுங் கியாபகம் வையென்றாள்.

தளுக்குதங்கம்:—தான் உண்டு பசியாறியபின் தாம்பூலங்கைப்பிடித்து துரை ரங்கப்பிள்ளையிடம் வந்து நீர் இராத்திரி வராமையாலல்லோ எனதுநகையனைத்தும் யாரோகள்வாடிக்கொண்டோடி விட்டார்கள். அது உம்மாலே நேர்ந்தமையால் நீ உடனே

எனக்கு முன்னமிருந்த நகையைப்போல அனைத்தும் செய்து போடவேண்டியதே இதற்கென்ன சொல்லுகிறாயென்று கேட்டு அதையே ஆஸ்பதம்பண்ண கருத்துடையவளாய்க் கபடவார்த்தைகளாடி, அவனைத் தன் மாயவலையிற் சிக்கவைத்துப் பலதரம் வாதாடிச் சிணுங்கினாள்.

துரை ரங்கப்பிள்ளை:—அப்படிச் சிணுங்கியவளைப் பார்த்து அடி பெண்ணே! என் கண்ணே! தங்கம் நீயாதொன்றுக்கும் வருத்தப்படவேண்டாம். நான் உனதிஷ்டம்போல் எல்லாநகையும் செய்தளிக்கிறேன் இன்னங்கொஞ்சம் பொறுமென்று குஷால்படுத்தித் தட்டிக்கொடுத்து அவளைக் கூடிச் சுகித்திருந்தான். இம்மட்டித் தாயோழி சொத்தனைத்தும் தஸ்புஸ் என்றுதாய்ச் செலவழித்து பின்னாற் குரங்குபோல் விழிக்குகையிலல்லவோ யாவும் விளம்பரமாய்த்தெரியும். ஆதலால் வேசியுறவும் வியாபாரத்தொழிலும் காசியளவிற்காணலா மென்ப துண்மையாதலால், இவன் கைவரண்டபின்னல்லோ அந்த காக்ஷி தெரியுமென்பதைக் கருதாதவனாய்த் தலைவிரித்தாடினான்.

தளுக்குதங்கம்:—தான் பறிகொடுத்த நகைகளையெல்லாம் மறுபடியும் துரை ரங்கப்பிள்ளை அவள் காரைவார்த்த யாவத்து நகைகளையும் அவளுக்கு விலைகொடுத்துவாங்கியும், சிலதைப புதியதாய்ச்செய்தும், அவளுக்குப்போட்டு அழகுபார்த்து அவள் கருத்தின்படியே தனக்கிஷ்டமானதைத் தாராளமாய்க் கொடுத்துவருகையில் இன்னுமவளை மடிப்புபோசஞ்செய்யத் தீர்மானித்து தன் தாயைப்பார்த்து

அம்மா! இன்னும் ஏதாகிலும் தந்திரமிருந்தால் சொல்லென்று கேட்டாள்.

தாய்க்கிழவி:—அடியம்மா! தங்கம் நாம் நகையைப் பறிகொடுத்தோமென்ற தந்திரத்தில் சுமார் இரண்டாயிரத் தைந்நூறு ரூபாய் நமக்குக்கிடைத்தது. ஈதிப்படியிருக்க மற்றொருதந்திரம் இதற்குப்பின் பத்துநாள் பொறுத்து உனக்கு பக்கசூலைவந்து வாதைப்படுவதாய் ஜாலல்காட்டுவையாகில், அதில் எப்படியாகிலும் ஐந்நூறு ரூபாய் வசூல்செய்துக் கொள்ளலாம். இதையுங்கூட ஒருகை பார்த்துவிடுவதே நமக்கு நன்மையென எடுத்துரைத்தாள்.

துரை ரங்கப்பிள்ளை:—தளுக்கு தங்கத்துக்குசகல நகைகளையும் போட்டுப்பார்த்து சந்தோஷப்பட்டு பெண்ணே! இந்த நகைகளையும் தாரைவார்க்கப் போகிறாய் பத்திரம் ஜாக்கிரதையாய்ப் போட்டுக் கொண்டிருயென்றுசொல்லி மறுபடியும் என்னுடம்புக்கு ஒருமாதிரியாயிருக்கிறாய்? சங்கதி யென்னவென, இவள் என்னமோ தெரியவில்லையென்றாள்.

தளுக்குதங்கம்:—சிலநாள் பொறுத்து தான் கீழேபடுத்துக்கொண்டு அப்படா அப்படா! என்ன செய்வேன். இந்த பக்கம், போய்விடுதே. யெப்பப்பா அடியம்மா! இந்தபக்கம் அமுக்குடி இன்னம் பிள்ளையவாள் வரவில்லையா? நான் என்னசெய்வேன். எனத்துடிக்கையில் துரைரங்கப்பிள்ளை இந்த காபராவைக் கேட்டுக்கொண்டே வந்து அவளைப்பார்க்கையில், அவள் படும் வாதையை இவன் சகிக்கமுடியாதவனாய் இதென்ன சாமாச்சாரமென்றான்.

தாய்க்கிழவி:—என்ன தம்பி! நீ காலையிற் போய் விட்டபின் ஒரு நாழிகைக்கெல்லாம் பெரிய காபரா வாய்விட்டது. இவளோ படும்வதைசொல்ல முடியாது போய்விட்ட உடனே தர்மலிங்க வைத்தியரை அழைத்துவந்து பார்க்கையில் அவர் இது பக்கசூலை சூட்டைப்பற்றின வாய்வாயிருக்கின்றது. இனி மலசலங்கட்டி விடும் அப்போது சங்கட்டம் என்பதாய் என்னமோ கட்டுமாத்திரை உரைத்துக்கொடுத்துவிட்டு கொஞ்சமாய் இருநூறுரூபாய் தனக்குக் கொடுக்கும்பக்ஷத்தில் இந்நோயைத் தீர்ப்பேன் எல்லாம் பிள்ளையிடஞ் சொல்லுங்கள் நானென்ன சொல்வேனென்று போய்விட்டாரென்றாள்.

துரை ரங்கப்பிள்ளை:—உடனே வைத்தியரை அழைத்து வரச்சொல்லி ஆளனுப்பி அவர் வந்தபின் ஐயா! வைத்தியரே! இதென்னநோய் கையைப்பிடித்து நன்றாய்ப் பார்த்துச்சொல்லுமென, வைத்தியரே ஐயா கனவானே! இது பக்கசூலை சூட்டைப் பற்றின வாய்வாயிருப்பதில் ஒருவேளை மலசத்தையுங் கட்டிவிடும். இதற்கு இருநூறு ரூபாய் கண்டிப்பாய்க்கொடுத்தால் தான் என்னால் முடியும் சரியான மருந்து ஏற்றவேண்டுமென்றான்.

தளுக்குதங்கம்:—இப்படிப் பேசிக்கொண்டிருக்கிறபோது தனக்கு ஒன்றுக்கு ரெண்டுக்குவராமல் மலசல மடைப்பட்டு வயிருப்பிக்கொண்டு உபத்திரவமாயிருக்கின்றது. ஐயா வைத்தியரே! இனி நான் தாளமாட்டேன், என்னால் பொறுக்கமுடியவில்லை. எல்லாம் சும்மாயிருக்கிறார்கள். அவாளவாளுக்கு

வந்தாலல்லவா தெரியும். மூத்திரம் வயர்வெடிச்சிப் போகிறது. கொஞ்சங்கூட இறங்கவில்லையே யென கோஷ்டமிட்டாள்.

தாய்க்கிழவி:—வைத்தியரே! அப்படியே உன் இஷ்டப்படிக்கே பிள்ளையவாள் கொடுப்பார். தங்கத்துக்குத் தக்கபடி சரியான நல்ல மருந்தாய் பிறயோகித்து சலுதி மலசலமுதையமாகும்படிசெய்யென்றாள்.

வைத்தியர்:—

கட்டி மலசலமுங் கஷ்டிதமாய்நின்றிடவே
பொட்டியரை பலமாயுள்ளேற்ற—கெட்டியது
நீளவெண்ணிரண்டு நிமிஷத்தில்மலசலம்போம்
வாளமென்ன செய்யுமதை.

இச்செய்யுளின் கருத்தாய் அம்மருந்தை உள்ளுக் கேற்றிய மாத்திரத்தில், பத்து பனிரெண்டு நிமிஷத்திற் கெல்லாம் மலசலம் வெளிவந்து கொஞ்சம் குதரி உபத்திரவமில்லாது சும்மாயிருக்க வைத்தியரும் சாயங்காலம் வருகிறதாய் சொல்லிவிட்டு தன்வீட்டிற்குப் போய்விட்டார்.

துரை ரங்கப்பிள்ளை:—தனுக்கு தங்கம் செய்யும் சதிசர்ப்பனை வஞ்சகம் கிஞ்சிற்று மறியாமல், நெஞ்சிற் கபடில்லாதவனாய் வைத்தியருக்கு அவர் கேட்ட தொகையைக் கொடுக்கும்படி திட்டஞ்செய்து விட்டு மறுநாட்காலையில் நான் போய்வருகிறேன் நீங்கள் பத்திரமாயிருங்கள் இன்னும் அதற்கு வேண்டிய விஷயங்களைச் செய்து சீக்கிறத்தில் உடம்பு லகுவுபடுவதைப்பாருங்கள். இனி சும்மாயிருந்தால் காரியமில்லை யென்று சொல்லி விட்டகன்றான்.

தளுக்குதங்கம்:—தான் பகலெல்லாஞ் சும்மாயிருந்து விட்டு இராத்திரிக்கு துரை ரங்கப்பிள்ளை வருஞ்சமயத்தில் இவள் பக்க சூலையினால் மெத்தவும் வாதைப் பட்டுக்கொண்டிருக்கையில், இவன் வைத்தியருக்குக் கேட்டது கையிற் கொடுத்தீர்களா இல்லையாவெனக் கேட்கையில், இவர்கள் வைத்தியர் சாயுங் காலம் வந்து தொகையை வாங்கிக்கொண்டு மருந்து கொடுத்துவிட்டுப் போயும் அது அப்படியே தீராமல் வாதைப்படுகிறாளென்றாள்.

தாய்க்கிழவி:—அப்பா தம்பி! இதென்னமோ சந்தேகமாயிருக்கிறது. இது உடம்பாலத்த நோயல்ல இவை செய்வினைக் குணமாயிருக்கிறது. இதற்கு நமசிவாயனை அழைத்துவந்து பார்த்தால் அது இது வென்று கண்டிதமாய்த் தெரியுமென, அவனைக் கொண்டு விளக்குவைத்துப் பார்க்கையில், அவன் உள்ளபடி சட்டமாய் விளக்கிற்பார்த்து இவை நோயல்ல, ஒரு பெண் பிள்ளை விரோதத்தினால் இவ்வாறு செய்தது இது சூனியந்தான் என்று சொன்னான்.

துரை ரங்கப்பிள்ளை:—ஆமாம் எந்தப் பெண் பிள்ளை யென, மாந்திரீகன் அது மேலண்டை பக்கம் எல்லாஞ் சொந்தக்காரரே செய்தது என, இவன் அவை எவ்விதமாய் செய்ததென. மாந்திரீகன் அது மாவுசெய்து காவுகொடுத்து உடனே கொன்றுவிடும் படி பாடையைக்கொண்டு செய்தது இதை நம்பக் கூடாது. இதற்கு இரண்டு மூன்று கழிப்பெடுத்து கஷ்டப்பட்டால்தான் காரியம் இல்லாவிட்டால் இது

வேலை தீர்ந்துவிடும். இதைப்பற்றி கழிப்பு மூன்றுக்கு ஐம்பது ரூபாயும், என் கஷ்டத்துக்கு இருநூறு ரூபாயும் கொடுத்தால் நான் அதை குணப்படுத்தத் தடையில்லை யென்றான்.

தளுக்கு தங்கம்:--இது சூரியந்தான் நான் பொல்லாத கனவைக் காண்கிறேன். எனக்கு மாறாட்டமாயிருக்கிறது. அதை அப்படி பார்க்காவிட்டால் என்னைக் காணமாட்டீர்கள். பிள்ளை யவர்களே! பணத்தைப்பார்த்தால் காரியமில்லை. என்னை நம்பினவுன்னை நடுத்தெருவில் விட்டு விடும்படியாய் முடியும். இனி சும்மாயிருப்பதிற் காரியமில்லையென, அவன் பெண்ணே! உனதிஷ்டம்போல் அந்தாள் கேட்பதைக் கொடுத்து சீக்கிரத்தில் உடம்பைத் தேற்றிக்கொள்ளுவதைப் பாரென்று தான் வெளியிற் செல்ல காலையிற் புறப்பட்டான்.

தாய்க்கிழவி:—அடியம்மா! தங்கம் இந்த தந்திரத்தில் நமக்கு ஐந்நூறு ரூபாய்க் கிடைத்தது. இனிச் செய்யும் தந்திரந்தான் மகா பெரியது. அதாவது:—உனக்கொரு பெரிய பங்களா வாங்கியாகிலும் அல்லது கட்டியாலும் கொடுக்கும்படியாய் அவனை மயக்கி நாம் கிரகித்துக்கொள்வதுதான் மகா பெரிது. அவனை இனி விடக்கூடாது. இச்சமயம் நாம் ஏமார்ந்து சும்மாயிருந்து விட்டால் அப்பால் அவன் அப்படிச் செய்விப்பவற்கு முடியாததாயிருக்கும். இப்போதே அதற்குக் கடைக்கால் பலமாய்ப் போட்டு வைத்து கிரகிப்பாயென்றாள்.

துரை ரங்கப்பிள்ளை:—இராத்திரி வருகையில் தாய்க்கிழவி அப்பா! மாந்திரீக நமசிவாயனுக்கு அவன் கேட்ட தொகையைக்கொடுத்து இரண்டு மூன்று கழிப்பெடுத்த பிறகு கூடியவரையிற் குணமாயிருக்கிறது பரவாயில்லை. ஆகிலும் நான் செய்து கொண்ட பிரார்த்தனைகளைச் செய்யாமற் போனாலுங் கேளாது அவைகளைச் செய்யும்பக்ஷத்தில் நூறுரூபாய்க்குமேல் பிடிக்கும் அதையெல்லாஞ் செய்தால்தான் அவள் நோய் ஒழிந்துவிடுமென்றாள்.

தளுக்குதங்கம்:—ஆ என் துரையே! உன் தயவினால் நான் பிழைத்தேன். என்னைக்கொல்ல சூனியம் வைத்தவர் உன்னைக்கொல்ல நினையார்களோ? நீ நன்றாயிருக்கவேண்டும். ஒருவேளைஉங்களுக்கு ஒரு பிராணச்சேதம் நேருமாகில் நீ தாலிகட்டின பெண்டாட்டி இருக்கிறதைக் கணக்குபார்ப்பாள். நான் அப்படியிருக்கமாட்டேன் உடனே என்னுயிரை விட்டிடுவேன். அது சுவாமிக்குத்தான் தெரியுமென அவனைத்தழுவி மெத்தவும் விசுவாசமாய்ச்சொன்னாள்.

தாய்க்கிழவி:—அப்பா மருமகப்பிள்ளையே! உன் தயவினால் என் மகளுக்குவந்த ஆபத்தைத் தீர்த்துவிட்டேன். அதோடு நான் தெய்வந்தேவாதிகட்குப் பிரார்த்தனைசெய்து கொண்டதெல்லாஞ் சம்பிரமமாய் நடத்திவிட்டேன். நானிருப்பது நிச்சயமா? இனிநீங்களிருவரும்நகமுஞ்சதையுமா யிருங்கள். உன்னைவிட்டால் அவளுக்கு யார்திக்கு? உன் பெண்சாதியை நம்பாதே. அவளோ கொடிய சண்டாளி சம

யம்வந்தால் உன்னையும் கொல்லச் சூனியம்வைப் பாள் என் சொல்லைக் கெட்டியாய் நம்பிடுமென்றாள்.

துரை ரங்கப்பிள்ளை:—சிலநாட்கள் சென்றபின் தளுக்கு தங்கம் உடம்பு தேறினவளாய் டக்குசெய்து இவனை முழுத்தும்படி தந்திரஞ்செய்து என் துரையே! இத்தனைநாள் என்னோடுகூடிச் சேர்ந்தணையாதிருந்ததைப்பற்றி நான் எவ்வளவோ மனஸ்தாபப்பட்டிருந்தேன். என் சக்களத்திசெய்தவேலை நான செத்தேயிருப்பேன். இப்போது உன்கிருபையால் பிழைத்தேன் நாமிருவரும் சேர்ந்து கூடியணைந்து சுகபோகலீலை செய்யலாம் வாவென்று இருவரும் போகிக்க இசைந்தார்கள்.

தளுக்குதங்கம் :—இப்படியே சில நாளிருக்கையில் ஒருநாள் தேதியில், இவன் இரவில் வரும்வேளையில் இவள் கொஞ்சம் மனஸ்தாபமாய் வருத்தப்பட்டிருப்பவள்போல முகவாட்டமாய் சோர்ந்து துயரமுற்றிருக்கையில், இவன் அவளைநோக்கி அடியென் கண்ணே! என்ன மனக்கிலேசமாயிருக்கிறாய்? உடம்புக்கென்ன அந்த விஷயத்தைச் சொல்லென்றுகேட்கையில், இவள் மறுபடியும் துக்கித்துத் தேம்பித் தேம்பியழுது கண்ணீர்சொரிந்தாள். அவ்வேளையவன் ஏன் தேம்பியழுகிறாய் உனக்கென்ன குறை? சகலத்திற்கும் நானிருக்கிறேன் உனக்கென்னபயம்? அதை எனக்கு சொன்னாலல்லவா தெரியும். நீயதை விவரமாய்ச்சொல்லென்று அவள் கண்ணைத் துடைத்து உன் எண்ணத்தை வெளிப்படுத்திச் சொல்லென்று கேட்டான்.

தாய்க்கிழவி:—என்னடியம்மா? தங்கம் நீ துக்கித்து வருத்தப்படுவது இன்னதென்று தெரியவில்லையே! பிள்ளையவாள் கேட்கிறதற்குச் சொன்னலல்லவா தெரியுமென, இந்த தளுக்கு தங்கம், ஆமாம் கனவானே! நாம் குடிக்கூலி வீட்டிலிருப்பதால், கேவலம் கண்டநாய்கள் கண்டபடி பேசக் கேட்கலாயிற்று. எப்போதும் எலிவளையாகிலும் தன் வளையாயிருக்கவேண்டும் ஆதலால், தாங்கள் இப்போது எந்தபாடுபட்டாகிலும் ஒரு நல்ல பெரியபங்களா விலைக்கு வாங்கியாகிலும், கட்டியாகிலும், நீ கொடுத்தால்மாத்திரம் உனக்கு நான் தக்குவேன். இல்லையாகிலும் நீ என்னைக் காணமாட்டாய்? நான் சத்தியமாய்ச் சொல்லுகிறேன். இது நிச்சயமென்றுரைத்தாள்.

துரை ரங்கப்பிள்ளை:—ஆ பெண்ணே! அப்படியா அதற்காகவா வருத்தப்படுகிறாய்? இதை முன்னம் என்னிடஞ் சொல்லக்கூடாதோ? ஆனால் இனி உன் இஷ்டப்போல் செய்விக்கிறேன். நீ பயப்படவேண்டாம், நான் கூடியசீக்கிரத்தில் உனக்கு அமைப்பிக்க என்னாற் கூடுமென்று மறுநாளே பலவிடங்களில் விசாரித்து மாடவீதியில் ஓர் பங்களா சுமார் இரண்டு காணி விஸ்தீரணத்தில் நாலுபக்க மதிலும் கேட்டும்வைத்து புஷ்பச்செடிகள் நிறைந்துள்ளதில், ஓர் பங்களாமேல் மெத்தையுள்ளதும், அதில் சில தனிக்கட்டடங்களும், தோட்டந் துறவுகளுமா யுள்ளதைப்பார்த்து நாலைந்துநாளிற்குள் பதினாயிரம் ரூபாய்க்கு ஓர் பங்களாவை வாங்கினேன்.

அப்பங்களாவானது—இரண்டுகாணி விஸ்தீரணத்தில் அந்நகர மாடவீதியில் பப்ளிக் ஹைறோட்டில் மகா வுன்னதமாய்க் கட்டிய மெத்தையும் அதின் பக்கங்களில் நாலு தனிக்கட்டடங்களும், நந்தவனம், நடபாய், தோட்டம், துரவுயாவும் அமைந்துள்ளதை வாங்கி தளுக்குதங்கம் பேர்வழிக்கே விக்கிரையபத்திரமெழுதி ரிஜிஷ்டருஞ்செய்வித்து அவள்பேருக்கே கிராண்டும் பிறப்பித்து அதில் யாதொருவில்லங்கமுமில்லாதிருக்க அவளுக்கே சுவாதீனஞ்செய்து அவளையும் அவள்தாயையும் அங்கழைத்துக் கொண்டுபோய் அவர்களுக்குக் கம்பீரமாய்க் காட்டினான்.

தளுக்குதங்கம்:—அதைப் பார்த்து மகிழ்ந்து இவன்மீது மெத்தவும் பக்ஷமுடையவளாய் ஓ என் பிரியமானபிரபுவே! தாங்கள் இஷ்டம்போல் எனக்கு இந்த பங்களாவை வாங்கிக்கொடுத்ததில் எனக்கு மகா சந்தோஷமே ஆயினும் இப்பங்களாவில் நாம் கிரகப்பிரவேசம் செய்கையில் நமது மனுஷியாள் யாவருக்குஞ்சொல்லி வரவழைத்து அன்றையதினம் நாமிருவருங்குந்தி ஓமம்வளர்த்தி அங்குசெய்யவேண்டிய சடங்குகளனைத்துஞ் செய்துவருவார்க்கு விருந்து முதலியதுஞ் செய்வித்து இதில் நாம் வருகையில் யாவரும் உம்மை வெகுவாய்க்கனப்படுத்தி புகழ்ந்து கொண்டாடுவதில் அது எனக்கு மெத்தவும் கௌரவமென்றாள்.

தாய்க்கிழவி:—எனது பிரிய அருமை மருமகப்பிள்ளையே! என்மகள் உன்னை யாதினும் மேன்மைப்படுத்திவருவதால் அவளிஷ்டம்போல் நீ நடப்பதில்

உனக்கு யாதொரு குறைவுநேரிடாது. நீ செய்த தபோபலத்தினால்தான் இவள் உனக்குவாய்த்தாள். இவளது கருத்தின்படி நடத்திவந்தவர்க்குத் தானமளித்து மற்றவர்க்கு மரியாதைசெய்து பலர்க்கும் விருந்துமுதளித்து நாமந்த பங்களாவிற் பிரவேசிப்பது உத்தமமாகையால், இதை அவசியம் நமது தங்கம் அபிப்பிராயம்போற் செய்யுமென்றாள்.

துரை ரங்கப்பிள்ளை:—ஒர் நல்ல சுபதினத்தில் நல்ல முகூர்த்தத்தில் தாங்களிருவருங் குந்தி ஒமம் வளர்த்தி சகல சடங்கு களையுஞ் செய்துவந்ததினால், இவர்களுக்கு ஆசீர்வாதஞ்செய்து எழுதிய வரவு ரூபாய் ஐந்நூற்றி யெழுபத்தாறு அணா எட்டு மொய்யெழுதவந்தது. அப்பால் வந்தவர்க்கு சில தானமளித்து, மற்றவர்க்குத்தக்கபடி மரியாதைகள் செய்து யாவர்க்கும் விருந்து முதலாகியதுஞ் செய்வித்து தாம்பூலம் அளித்து தாங்கள் அப்பங்களாவில் கிரகப்பிரவேசி களானார்கள்.

தளுக்குதங்கம்:--நாலைந்துநாள்பொறுத்து தனது மாப்பிள்ளையிடம் ஆமாம் என் பிரியமாகிய கண்ணாளா! நீர் செய்ததெல்லாஞ்சரியே. தாங்கள் எனக்கு நல்ல பங்களாவைத்தான் வாங்கிக்கொடுத்தீர் அது ஒரு பெரிதல்ல. அதற்கேற்ற தட்டுமுட்டு பெட்டி, பேழை, பெஞ்சு, நாற்காலி, பீரோவு, ரவுண்டேபில் முதலியதும் பித்தலை வெண்கலம்-துத்தநாக முதலிய பல சாமான்களும், மற்ற லஸ்தர்-வால்ஷேட்டு-குலோப்பு முதலியதும் செட்டாயிருந்தாலல்லவோ தங்களுக்கு

மெத்தவும் கௌரவமாயிருக்கும். இப்படிக்கில்லா விடின் கேவலமானவர்களும் நம்மைப் பழிக்கமாட் டார்களா? ஆதலால் இவைகளனைத்தையுந் தயார் செய்து அமைப்பாயென்றுரைத்தாள்.

துரை ரங்கப்பிள்ளை:—அப்பங்களாவிற் கேற்றாப் போல் அதற்குவேண்டியதை முற்கூறியபடி வாங்கிக் கொண்டுவர தான் ஆயிரம் ரூபாய் எடுத்துக்கொண்டு போய் ஷாப்புகளிலும், மரச்சாமான்கள் விற்குமிடத் திலும், பித்தளை வெண்கலம் துத்திநாக முதலியவை விற்குமிடங்களிலுஞ் சென்று தனக்குவேண்டியதை அங்கங்கே கொண்டுவந்து யாவையும் அதில் மகா அலங்காரமாக சிங்காரித்து பார்ப்பவர் ஆச்சரியப் படும்படியாய் எங்கும் நிறப்பிவைத்திருந்தான்.

தளுக்குதங்கம்:—வீட்டிற்குவேண்டிய அண்டா-பாணுதவலை-சொம்பு-கிண்ணமுதலியதும் ஹாலுக்கு வேண்டிய நாற்காலி பெஞ்சு-பெட்டி-பேழை-பீரோவு மற்றதுகளையும், மேலுக்குவேண்டிய லஸ்தர்-குலோப் வால்ஷேட் முதலியதனைத்தும் இன்னும் இதிற் சொல் லப்படாத சகல சாமான்களையும் செட்டாய் வாங்கிக் கொண்டுவந்து அவைகளை அங்கங்கேயமைத்து வெகு திட்டமாய்ப் பார்ப்பவர் பிரமித்து வியப்படையும் படி எங்குஞ்சோடித்து அதிக சொகுசாயிருக்கக் கண்டாள்.

தாய்க்கிழவி:—இப்பங்களா சகல சாமான்க ளமைத்துச் சிங்காரித்துள்ள அலங்காரத்தைப் பார் த்து மனமகிழ்ந்து மெத்தவும் சந்தோஷகரமாய் பூரித்து தன் மகளைக்கட்டித்தழுவி யணைத்து முத்த

மிட்டு அடி என் கட்டிக்கரும்பே! என் கண்மணியே! உன்புத்தி சாதுரியத்தைப்பற்றி நான்மெத்தவும் சந்தோஷித்தேனடி மகளே! இனி யுனக்கு ஒரு குறையிமில்லை. இப்போது நாம் செய்த சகல தந்திரங்களால் சுமார் இருபத்தையாயிரம் ரூபாய் நமது கையிற் சிக்கிவிட்டது. இனியென்ன தந்திரமிருக்கின்றது. ஆகிலும் பரவாயில்லை அதை யான் யோசித்துச் சொல்லுகிறேன். அது இருக்கட்டும் இதற்குள் நீ செய்யவேண்டிய முயற்சி ஒன்றிருக்கின்றது. அவை யாதெனில், தாலுக்கன் சத்திரத்தருகில் புழலேறிப் பக்கத்தில் தண்ணீர் தாராளமாய் பாயப்படுவதாயுள்ள கழனிகள் பத்துகாணிக்கு வாங்கி உன்பேரில் பட்டா செய்து வைத்துப் பயிரிடுவதைப் பாரென்று சொன்னாள்.

துரை ரங்கபிள்ளை:—தனக்கு தங்கத்தாச்சு பங்களா தோட்டம் வாங்கிக்கொடுத்த இரண்டொரு மாதத்திற்கெல்லாம் இவன் அவளைப்பார்த்து என் பிராணநாயகா! என்னைப்போல உன் பெண்சாதி உன்மீது இவ்வளவு ஆசையும் பிரிய நேசமும், அதிக விசுவாசமுமாயிருக்கிறாளா? இல்லையென்பது தெய்வந்தானறியும் நீ என்னைவிட்டு எங்கேயோ போய்விடுகிறீர். ஏன் நீர் வரும்வரையும் உன் வரவை யெதிர் பார்த்து ஏங்கியிருந்து வாடி வதங்கியிருக்க விதிவசம் வாய்த்ததுபோல், நீர் எப்போதுமிருக்கும் என்னைவிட்டு நீங்கியிருக்க உமக்கெப்படி மனந்துணிந்தது? என்றாள்.

இதைக்கேட்ட பிள்ளையவர்கள் இவள் சொல் மொழிக்கே பதினாயிரங்கொடுக்கலாம் என்று அடி யென் கண்ணாட்டி இனி அப்படியே உன்னிஷ்டப்படி உன்னிடத்திலேயே சுகித்திருக்கிறேன். நீ வருத்தப் படவேண்டாம். இன்னும் சிலநாளில் எல்லாம் ஜாடித்துக்கொண்டு வந்துவிடுகிறேன் அதுவரையிலும் கொஞ்சம் மனம்பொருத்திரும். ஏனெனில் உலக நிந்தனைக்கு நாம் பயப்படவேண்டியதா யிருக்கின்றது வீட்டிலும் மெத்த காபரா சொல்கிறார்கள் நீ வருத்தப் படாதே யென்றான்.

தளுக்குதங்கம்:—என் பிராணவல்லபா! பக்கத்துதெருவில் சேலம் ஜீவரத்தினமென்பவளுக்கு ஓர் ஏழைப்பிராமணன் முஷ்டியெடுப்பவன் வெங்கடசுப்பய்யர் துலுக்கன்சத்திரத்தருகில் புழலேரிபக்கத்தில் தண்ணீர்பாச்சல் தாராளமாய்ப் பாயப்படுவதாயுள்ள கழனிகள் நாலைந்துகாணி நாலாயிரம் ரூபாய்க்கு வாங்கி அவள் பேருக்கே விக்கிரையபத்திரம் ரிஜிஸ்தர் பட்டா சிட்டா யாவும் செய்து வைத்திருப்பது என்ன கௌரவமாயிருக்கின்றது. ஆகையால் தாங்கள் அதின்பக்கங்களில் கொஞ்சம் நிலம் விற்பனைக்கிருக்கிறதாம். அதில் நஞ்சையில் பத்து காணியும், புஞ்சையில் ஐந்தாறுகாணியும் என்பேருக்கு வாங்கிக் கொடுப்பீராகில், அதை அங்குள்ளோர் பயிரிடுங் காலத்தில் அங்கு நாமிருவரும் அடிக்கடி உல்லாசமாய்ப் போகவர யோக்கியமாயிருக்குமல்லவா? இதெல்லாம் உமக்கொரு அலட்சியமாகையால் எனக்கு வாங்கிக்கொடுக்கவேண்டு மென்றாள்.

துரை ரங்கப்பிள்ளை:—தான் கோச்வண்டி ஏறிக் கொண்டு உடனே துலுக்கன் சத்திரம்போய் தளுக்கு தங்கம் சொல்லியபடியே புழலேறிப்பக்கத்தில் அந்த கிராம மணிய முனிசிப்பு கணக்கனறிய நஞ்சையில் பத்துகாணியும், புஞ்சையில் ஐந்தரைகாணியும் சுத்த கண்டக்கிரையமாய் பன்னீராயிரத்து நானூறு ரூபாய்க்கு வாங்கி தங்கம் பேருக்கே விக்கிரைய பத்திரம் ரிஜிஸ்டர் பட்டா சிட்டா முதலியது மேற்படுத்திக் கொண்டு தான் பட்டணம் வந்து சேர்ந்து தன்வீட்டிற் போஜனமுண்டு தளுக்கு தங்கமிடம் அன்றிரவிற் படுக்கைக்குப்போய் சேர்ந்தான்.

தளுக்குதங்கம்:—தன் கணவனாகிய துரை ரங்கப் பிள்ளை வந்தவுடனே மெத்தவும் விசுவாசமாய் அவனை உபசரித்து ஓ என் பிராண நாயகா! தாங்கள் போய் வந்தகாரியம் காயா பழமாவென, நான் போனால் சும்மாவருவேனோ? எல்லாம் பழமாக்கிதான் வந்தே னென அது இருக்கட்டும் தாங்கள் மெத்தவும் இளைப்பாயிருக்கிறதுப்போல் தோற்றுகிறது. போஜனஞ்செய்ய வாருமென்றழைக்க, அவன் நான் வீட்டில் உண்டு பசியாறிதான் இங்கு வந்தேன் எனக் கொன்றும் வேண்டாமென, இவள் அப்படிக்கல்ல வென்று தன்னிடமுள்ள மிட்டாய் பலகாரம் சினி வர்க்கங்களை அவன் வாயில் வைத்து இதைக் கொஞ்சங் கடித்துத் தின்னுங்க ளென அவன் கொஞ்சங் கடித்துத் தின்ன, மற்றதை இவள் தின்று, மறுபடியும் வேறொன்றை யெடுத்து இவள் முன்னங் கடித்துத் தின்று மற்றதை அவன்

வாயில்வைக்கவும், அவனதைப் பொன்போலத் தின்று கூடிக்குலாவிச் சேர்ந்தணைந்து அப்பால் தான் போய்வந்த காரியத்தை யாவுஞ் சொல்லச் சொல்லி கேட்டாள்.

துரை ரங்கப்பிள்ளை:—அடி என் கண்ணாட்டி! உனதிஷ்டப்படியே நஞ்சையில் பத்துகாணியும், புஞ்சையில் ஐந்தரைகாணியும் பன்னீராயிரத்து நானூறு ரூபாய்க்கு அறுதிக்கிரையமாய்வாங்கி உன்பேருக்கே விக்கிரையப்பத்திரம் ரிஜிஸ்டர் பட்டா சிட்டாகளைக்கு யாவும் ஏற்படுத்திவிட்டுவந்திருக்கிறேன் இந்தா அந்தபத்திரம் பாரென்று கொடுத்தான். அதைத் தான் வாங்கிப்பார்த்து தன் தாயாரையும் அருகிலழைத்துவைத்துக்கொண்டு தானே அதைப் படித்துக்காட்டினாள் அதாவது:—

## நிலவிக்கிரைய பத்திரம்.

1836-ம் வருஷம் ஜுன்மீ 14உ-க்குச் சரியான தமிழ் பராபவஞு பங்குனிமீ 28உ செங்கல்பட்டு ஜில்லா, பொன்னேரி தாலுகாவைச்சேர்ந்த பம்மதுகுளம் கிராமத்திலிருக்கும் சென்னபட்டணம் துரை ரங்கப்பிள்ளையின் பாரியாளாகிய தங்கம்மாளுக்கு ஷை ஊரிலிருக்கும் சண்முகசுந்தரமுதலி யெழுதிக்கொடுத்த நிலவிக்கிரையப்பத்திர மென்னவென்றால், இப்பவும் என் சுயார்ஜ்ஜிதமாய் நான் கையாண்டனுபவித்து வரும் ஷை. ஊரிலுள்ளபங்கு 8-ல், எனது நாலாங் கரைபங்கில் சேர்ந்த நஞ்சைநிலம் காணிபத்தும்,

புஞ்சைநிலம் காணி ஐந்தரையும் தங்களுக்கு சுத்த கண்டக்கிரையமாய் விற்று நான் கைப்பற்றிய ரூ. 12400 இந்த எழுத்தால் ரூபா பன்னீராயிரத்து நானூறும் விலையறவிற்றுப் பொருளறக் கைக்கொண்டேன். இதற்குள்ள மாவடை மரவடை ஜலநிதிபாஷாணம் அறநீர் முறைநீர் தெண்டம் அமுஞ்சி யாத்திரை வாயிதா முதலானதுக்கும் தாங்களே பாத்தியஸ்தராய்ப் புத்திரபவுத்திர பாரம்பரியமாய் சூரிய சந்திராளுள்ளவரைக்கும் தாங்களே அனுபவித்து வந்து அதற்குண்டாகிய வாயிதா முதலியதும் நீங்களே கட்டிக்கொள்ளக் கடவீராகவும். இதற்கு யாதொரு கலன் முன்னொத்தி அடகு வாயிதா பாக்கி தோற்றுமாயின் அவைகளை நானே முன்னின்று தீர்த்துக்கொடுக்கக் கடவேன். இந்தப்படிக்கு என் மனோராஜியில் சாக்ஷிகளின் முன்னிலையில் சம்மதித்து எழுதிக்கொடுத்த விக்கிரையப்பத்திரம்.

| சாக்ஷிகள். | இப்படிக்கு, |
|---|---|
| மா. மு. அருணாசல ஷ்ஷ | வி. சண்முகசுந்தர ஷ்ஷ |
| கணக். முருகேசபிள்ளை. | கையெழுத்து. |
| மா. சொக்கலிங்க ஷ்ஷ | |

தாய்க்கிழவி:—தன் மகள் தளுக்குதங்கம் வாசித்ததைப்பார்த்து தாங்களிருவரும் ஒருபுஜம் இருபுஜமாய்ப் பூரித்து மகா சந்தோஷமடைந்து இவள் அடியம்மா என் கண்மணியே! இனிமேல் நீ அத்தானை விடாதே. அத்தானைப் பத்திரமாய்க் காப்பாற்று உனக்கெல்லாம் உண்டு. அப்பா அருமந்த மருகமப்பிள்ளையே! நீங்களிருவரும் உடலிரண்டும் உயி

ரொன்றுமாயிருங்கள். நானோ என்காயம் நிச்சய மில்லை நீங்கள் எப்போதும் இளையாமல் சோடுபுரா வைப்போ லிருங்களென்றகன்றாள்.

தளுக்குதங்கம்:—ஆ! பொன்னத்தான் உன் சாமார்த்தியமும் தைரியமும் வேறொருவருக்கு வா வென்றாலும் வராது. நீர் வாங்கிய நிலத்தை நான் வந்து பார்க்கவேண்டுமென்பதாய் மெத்தவும்எனக்கு ஆசையா யிருக்கிறபடியால், நாமிருவரும் போய் அதைப் பார்த்துவரலாம். அதற்கெப்போது புறப் படுவீர் சொல்லுமென, அவன் நாளையன்று உதை யத்தில் அப்படியே நாமிருவரும் போய்வரலாம் நீ நாளையராவிக்கே கட்டமுது கட்டிவைத்துக்கொள் ளென்று கட்டளையிட்டான்.

துரை ரங்கப்பிள்ளை:—தாங்கள் துலுக்கன்சத்தி ரம்போவதற்கு வண்டிகட்டச்சொல்லி தங்கத்தையும் தயார்படுத்துகையில் அவளும் ஆஜராயிருக்க, இரு வரும் வண்டியிலேறிக்கொண்டு துலுக்கன் சத்திரத் தண்டை பம்மதுகுளத்துக்குப் போய்ச்சேர்ந்து அங் கிறங்கி இவன் வாங்கிய நிலங்களையெல்லாம் அவ ளுக்கு நன்றாய்க்காட்டி அங்கொரு வீட்டிலிறங்கி கட் டமுதைப் புசித்து சயனித்திருந்து மறுபடியும் மாலை மூன்றுமணிக்குப் புறப்பட்டுவந்து தங்கள் பங்களாவி லிறங்கினர்.

தாய்க்கிழவி:—இவாளிருவரும் போய்வந்த சங்க தியை யறிந்து அடியம்மா! அங்கொரு மெத்தைவீடு கட்டிக்கொடுக்கும்படி உசிப்பேற்றி அவனைத் தந்தி ரஞ்செய்து அதையும் முடித்துக்கொள் பார்க்கலாம்

அப்போதுதான் நாமங்கே போகவரத்தங்க இட முண்டு அதிலும் அங்கே விளையுந்தானியம் தவசகளை அங்கே பார்விட்டில் வைக்கிறது. அதற்கு முன்ஜாக்கிரதையாகவே நிறைவேற்றிக்கொள் பின்னாலே நடத்துவது கஷ்டம் அதை முன்னே கட்டப்பாரென்றாள்.

தருக்குதங்கம்:—என்றுங்கோ அத்தான் நீங்கள் நிலம்வாங்கியும் அவாந்தரப்பிழைப்பாயிருக்கின்றது. அதென்னவெனில், நாமங்கு போகவரத் தங்கவும், நாளைப் பயிரிட்ட தானிய முதலியவை வைக்கவும் நமக்கிடமில்லாதிருப்பது அது ஒரு பெரிய சங்கடமாயிருக்கிறபடியால், அங்கொரு காணிதரப்பில் ஒரு மனைத் தூரத்துக்குத்தூரம் ஓர்மெத்தை ரோட்டிற் போவார்வருவார் பலானவர் மெத்தையெனச் சொல்லும்படியாய் தங்கள்பெயர் எங்கும் விளங்கக் கட்டிவைத்தால் நமக்கு மெத்தவும் சவுக்கியமாய் யாவற்றுக்கும் பந்தோபஸ்தா யிருக்குமென்றாள்.

துரைரங்கப்பிள்ளை:—அப்படியே ஆகட்டும் அதையும் உன்னிஷ்டம்போல் கட்டிவைக்கிறேன் நீ ஆயாசப்படவேண்டாம். எனக்குத் தெரியுமென்பதாய் ஒரு கண்டிராக்டர் மூலமாய் அங்குவிடுகட்ட ஒரு காணிநிலத்திரணம் காலிமனைவாங்கி அதை இரண்டாயிரத்தைந்நூறு ரூபாய்க்கு தன்னிஷ்டம்போல் பிளான் முதலியதும் போட்டு அதேபிரகாரம் ஒன்றரைமாதத்திற்குள் கட்டிக்கொடுக்கும்படியாய் பேசகஞ்செய்ததில் அந்த கண்டிராக்டரும் அந்த நிலத்தில் மெத்தைவீடால் சமையலுக்குத் தனிக்கட்டடம் காடிகானை நடபாய் யாவற்றும் செய்யத்தொடங்கி இர

ண்டு மாதத்தில் முடித்துவிட மற்றபணத்தை வாங்கிக்கொண்டான்.

பாலகிருஷ்ண முதலி:—கண்டிராக்டர் கட்டிய மெத்தை வீட்டை பிள்ளையவர்களும் தங்கமும்போய் பார்வையிட்டு அவர்கள் மனதிற்கு சம்மதியாயிருக்க, தாங்கள் அதில் கிரகப்பிரவேசஞ்செய்து குடியிருக்க, அல்லது குடிக்கூலிக்குவிட்டிருக்க எத்தனித்தவராய் ஒருநாள் நல்லதினம்பார்த்து அங்குசெய்யவேண்டிய சடங்குகளைச்செய்து பலருங்கொண்டாட யாவர்க்கும் விருந்து மரியாதை முதலியதுஞ்செய்து இரண்டு மூன்று நாள் அங்கேயே இருந்து குடித்தனஞ் செய்தார்கள்,

துரை ரங்கப்பிள்ளை:—அதற்கப்பால் இரண்டு மூன்று குடித்தனக்காரரை அதில் வைத்துவிட்டு தாங்களிருவரும் தங்களிருப்பிடம் வந்து சேர்ந்து அங்கு நடந்ததியாவும் தன் தாய்க்குச் சொல்லி அவர்கள் சந்தோஷப்பட்டிருக்கையில், இவனுக்கு இவர் வைத்த மாயமருந்தினால் ஒருவிதமாகிய நோயுதித்து அதிலும் வாதைப் பட்டுக்கொண்டு இவர்களிடம் வருத்துப் போக்காயிருக்க, அப்பொழுது இவர்களிடம் இரண்டாயிரத்தைந்நூறு ரூபாய் கையிருப்பிருக்கின்றது.

தளுக்குதங்கம்:--தாங்கள் இப்படியிருக்குங்காலத்தில் பூந்தமல்லியிலிருந்து ஓர் முத்திலிச்சி குருட்டு மாப்பிள்ளையண்டை திருட்டுப்பிள்ளை வாங்கிக்கொண்டு இருட்டிலதைப்பெற்று குரட்டூரில் வந்திருந்ததில் அப்பெண் குழந்தை சிவப்பாய் லக்ஷணமாயிருப்

பதை அவள் தேவடியாள் வீட்டில் விற்கப்போனசம
யம் அதை தாய்க்கிழவி பார்த்தழைத்துவந்து அத
ற்கு நூறு ரூபாயும், ஒரு புடவையுங்கொடுத்து வாங்
கிக்கொண்டு அதை மெத்த பக்ஷமாய் வளர்க்க ஆரம்
பித்தார்கள்.

துரை ரங்கப்பிள்ளை:—தளுக்கு தங்கமிடம் வரு
கையில் தான் ஒரு குழந்தையைக் கையில் வைத்துக்
கொண்டிருக்கையில், இவன் அதைப்பார்த்து இந்த
குழந்தையேதென, இதை ஒரு மனுஷி காப்பாற்ற
சக்தியில்லாமல் விற்கவந்தாள் முதல் ஒருவர் நூறு
ரூபாய்க்கு வாங்கிப்போனதைப் போட்டிமேல் சிலர்
உயர்த்தி இருநூறு ரூபாய்க்குக் கேட்டதை என்தா
யார் பார்த்து அவளை மேலே பத்து ரூபாய் தாரேன்
வாவென்றழைத்துவந்து 210-ரூபாயும் ஒரு புடவை
யுங்கொடுத்து சோற்றைப்போட்டு அனுப்பி விட்டு
குழந்தையையெடுத்து வளர்க்கிறோமென்றாள். ஆனால்
இவன் இக்குழந்தையைப் பத்திரமாய் வளர்த்துவா
வென, இவள் இந்தா உன்புத்திரி நமக்கு சுவாமி
கொடுத்தார் அதின் அழகைப் பாரென்றுசொ
ன்னாள்.

தாய்க்கிழவி:—அடியம்மா தங்கம்! இந்த குழந்
தையை உங்கசொஜமானாகிய பெமானுக்குகாட்டினையா?
அதையவர் பார்த்தாரா? ஆனால் அதைப் பத்திரமாய்
நீங்கள் உயிர்க்குயிராய் வளர்த்துவாருங்கள் அது
பின்னால் உங்களுக்கு நன்மையைக் கொடுக்கும். இனி
இதற்குத்தக்க ஆபரணங்களை செய்துபூட்டி அழகு
பாருங்கள் இது நமக்குக் கிடைக்கத்தக்கதல்ல; இதற்

குப் பட்ட கஷ்டம் எனக்குத்தெரியும். இது வயதில் மகாலக்ஷணமாயும்யோகசாலியாயுமிருக்குமென்றாள்.

தளுக்குதங்கம்:—அந்த குழந்தைக்கு வேண்டிய நகைகளை வாங்கியும், புதியதாய்ச்செய்துபோட்டும் அதை வெகு முச்சட்டையாய் வளர்த்துவருகையில், துரை ரங்கப்பிள்ளையும் அக்குழந்தையின்மேல் மெத்தவும் அபேக்ஷையுடையவனாய்ப் போஷித்து வருவதில் இம்மூவரும் இக்குழந்தைக்கு நல்லநாள்பார்த்து அதற்குக் காதுகுத்தி மயிர்வாங்க சகலருக்குந் தெரிவித்து வரவழைத்து வெகு ஜம்பமாய் காதுகுத்தி மயிர்வாங்கி மங்கையர்க்கரசியெனப் பெயருமிட்டு மகா நேர்த்தியாய் வளர்த்தார்கள்.

இக்குழந்தை விஷயத்தில் நகைநட்டு முதலிய பல சடங்குகள் விஷயத்தில் ஆயிரம்ரூபாய்க்கு செலவு செய்தனன். இனி அதைப் பள்ளிக்கூடத்தில் வைப்பதற்காக ஒரு நூறுரூபாய் பிடிக்குமென்பதாய்ச் சொல்லக் கேள்வி. இவைகளுக்கெல்லாம் துரை ரங்கப்பிள்ளை சொத்தே. சொந்தமாய் கையிருப்பு 25000-ரூபாய் இருக்கவே யிருக்கிறது. இவர்கள் செலவு செய்துவிட்டு அவர்க்குக் கணக்குசொல்ல வேண்டியதே கடமை. அத்துகை கரைந்தால் ரொப்புவதே இவன் பெருமையாயிருந்தன.

துரை ரங்கப்பிள்ளை மனைவியாகிய தனபாக்கியமென்பவள் தன் புருஷன் பஞ்சைப்பநாதிகளாகிய லஞ்சைமுண்டைகளுக்கு மிஞ்சவளிக்குஞ் சொத்துகளிற் கிஞ்சிற்றுகூட; நமக்குப் பின்னாற் கிடைப்பதரிதென மனதிலெண்ணி, தாளொருநாள் தன் தமைய

ளாகிய தேவராஜபிள்ளையை வரவழைத்து இராத்திரி மூன்னேரத்திலேயே கள்ளச்சாவிபோட்டு பொக்கிஷ அறையின் கதவைத்திறந்து அதற்குள்ளிருக்கும் பெட்டிகளைக் கள்ளக்கொத்துச் சாவிகளைப்போட்டுத் திறந்து யாவற்றையும் பார்வையிடுகையில், அவை களில் பணம், ரூபாய், சவரன், நோட்டுகள், நகை கள் மற்றுஞ் சிலவஸ்துக்களை யெடுத்துக்கொண்டு இன்னுமுள்ள பத்திரமுதலிய கணக்குகள், ரசீதுகள், புஸ்தகங்கள், வெற்று ஸ்டாம்புகள் இவைகளை யெல் லாம் திறந்ததாக அப்பப்படியே போட்டுவிட்டு கானடவிளக்கேற்றிக் கதவைத்திறந்து திருடர் வந்து களவுசெய்து போனதாக யாவருக்குந் தெரியும்படி ஜாடைகாட்டி யிருக்கையில், தாங்கள் கைப்பற்றியதை அப்போதே தன் தமையனை தகப்பனிடம் அகப்பட் டவரையிலளிக்கச் சொல்லி அனைத்தையும் அவனிடங் கொடுத்தனுப்பிவிட்டாள்.

தனபாக்கியம்:—இராத்திரி பனிரெண்டுமணிக்கு விழித்துக்கொண்டு பார்க்க விளக்கெரியக்கண்டு எழு ந்துபோய்ப் பார்க்கையில், சில பெட்டிகள் காணாம லும், சில பெட்டிகளைத் திறந்துபோட்டும் இருப்ப தைக்கண்டு தான் கோவென்றுகத்தி அந்த நேரத்தில் ஜம்புகளைக்கூட்டி தன்வீட்டிற் கள்ளர்புகுந்து களவா டிப்போயினரென மெய்யாலும் பறிகொடுத்தவள் போல் வேடிக்கைக்காட்டி விசனப்பட்டு வக்கணை சொல்லி பாட்டுபாடி அழுதுக்கொண்டிருக்கையில், இதற்குள் ஒராள் தளுக்குதங்கம் பங்களாவிற்சென்று துரை ரங்கப்பிள்ளையை அழைத்து தங்களை தனபாக்

கியம் அம்மாள் வீட்டில் கள்ளர்புகுந்து கொள்ளை யிட்டனரென உடனே கையோடே அழைத்துவரச் சொன்னார்கள். சீக்கிரம் வாருங்கள் என்று வந்து வீட்டிற் சேர்ந்தார்கள்.

துரை ரங்கப்பிள்ளை:—தன் மனைவியாகிய தன பாக்கியம் வக்கணையிட்டழுவதைக் கேட்டு உள்ளே நுழைந்துபோய் பார்க்கையில், தங்கள் சொத்து திர வியம், ரூபாய்கள், சவரன்கள், நோட்டுகள், நகைகள் இன்னுஞ் சிலவஸ்துக்கள் காணாதிருக்க மற்ற பத்தி ரம், ஸ்டாம்பு, ரசீது, புஸ்தகங்கள் முதலியதை கீழே இறைத்து பெட்டியை அப்படிப்படியே போட்டுவிட் டிருப்பதைக் கண்டு இவன் தன் மனைவியை யழைத்து இங்கென்ன சங்கதியென்று தான் துக்கித்துக்கொண் டே விசாரித்தான்.

தனபாக்கியம்:—நான் இராத்திரி நித்திரை செய் கையில், பனிரெண்டுமணிக்கு விழித்துக்கொண்டு பார்க்கையில் விளக்கெரிவதைக் கண்டு எழுந்துபோய் சோதிக்கையில், இதே மாதிரியாயிருக்கக் கண்டு ஐயோ குய்யோ முறையோவென்று பயந்து கூச்சலி ட்டுப் புலம்புகையில் அண்டை யசலார் பெருங்கூட்ட மாய் வந்துபார்த்தார்கள். அப்பால் அந்த வீட்டை மூடிச் சங்கிலிமாட்டிவிட்டு நான் அழுதுகொண்டிருக் கிறேன் இதுதான் சங்கதியென்று சொன்னாள்.

துரை ரங்கப்பிள்ளை:—இவ்விதக் கொள்ளையைக் கண்டு குண்ணிக் கூறுக்காயொடுங்கி தனக்கு நேர்ந்த பேரிடியை நினைத்து நினைத்து துக்கித்து இனி நாம் என்னசெய்கிறது, எப்படிப் பிழைக்கப்போகிறோம்.

நம்மை யார் மதிப்பார், அந்த தளுக்குதங்கம் தாங்
கப்போகிறாளா? இனி அவர்கள் நம்மை பரபாபண்
ணப் போகிறதில்லை. தேவடியாளிடஞ் சேர்ந்த தனம்
திரும்பிக் கிடைக்கப்போகின்றதா? ஐயோ சிவனே
யென்று தன்விதியை நொந்து அழுதுகொண்டு துக்க
சாகரத்தில் மூழ்கினவனாயிருந்தான்.

தனபாக்கியம்:—தன் புருஷனை நோக்கி, நீயேன்
விசனப்படுகிறாய் உன் தகப்பனார் தன் சொத்தை
தாசிகட்குத் தாரைவார்க்கிறதாய்க் கேள்விப்பட்டு
அதே நோயில் விறைய் மடிந்தார். நீயோ உட்செல
விருக்க புறஞ்செவுத்துக்கு மண்பூசுவதுபோல் தாசி
வேசிகளை சாஸ்வதமாய் நம்பி தனத்தைத் தாரை
வார்ப்பதுமன்றி வீட்டைவிட்டு வெளியிற்றிரியவானா
யினல்லவா? இக்கெடுதி நடந்து விளைந்தது. போன
தைக்குறித்துப் புலம்புவதில் அப்பொருள் வரப்போ
கிறதா? நீர் தைரியம் விடாமலிருமென் றுரைத்
தாள்.

துரை ரங்கப்பிள்ளை:—அடி மாதே! நீ எனக்கு
புத்திசொல்லவும் நானதைக் கேட்கவும், நாலுபேர்
என்னைப்பார்த்து நகைக்கவும், என்கிட்ட வாங்கியவ
ரிடம் இரக்கவும், தாசிவேசிகள்கூடச் சட்டைபண்ணா
திருக்கவும், பல சங்கடத்திற் காலங்கழிக்கவும், கள்
வர் கைப்பற்றிய தனத்தாற்கலங்கவும், இப்படிச்
கெல்லாம் நேர்ந்தமையால், இனி நான் உயிர்வைத்
திருப்பது சரியல்ல, உன்னையும் உன் பிள்ளைகளையும்
நடுத்தெருவில் விடும்படியாயிருப்பதைப் பற்றியே
மகா துக்கத்தை யடைகிறேனென்றான்.

தனபாக்கியம்:—ஆமாம் இந்த எண்ணம் முந்தி யிருந்தால் இப்படிக்கெல்லாம் வருமா? தெய்வங் கொடுக்கும் வாயிலுமூட்டுமா? ஒவ்வொருவருக்கும் வாழ்வுவருமுன்னே வளர்ந்துவரும் புத்தி, கேடுவரு முன்னே கெட்டுபோகும் புத்தி, இதிலும் விநாச காலே விபரீதபுத்தி என்பதுபோல, கெட்டுப்போக நாள்வந்தால் சொட்டுபுத்தி தன்னுடேதிப்பது வாஸ் தவமாகையால், இனி நாம் வருத்தப்படுவதில் ஒன் றும் சென்றது வரப்போகிறதில்லை. எழுந்திரும் சாப் பிடவாருமென்று கையைப்பிடித்து அழைத்துக் கொண்டு போய் சாதம் பரிமாரியதைச் சாப்பிட வைத் துபசரித்தாள்.

தளுக்குதங்கம்:—துரை ரங்கப்பிள்ளை வீட்டில் இராத்திரி கள்ளர்புகுந்து தனது சொத்துகளனைத் தும் கொள்ளைகொண்டு போயினரெனக் கேள்விப் பட்டு அதைத் தன் தாய்க்குத் தெரிவிக்க, ஆ! ஆ! அப்படியா சங்கதி? அதானு காலையில ஆள்வந்தழைத் தது. இனி நீ ஜாக்கிரதையாயிரு. அரைக்காசுகூட அவன் விஷயத்தில் காட்டாதே. பத்திரம் அவன் இப் போது நம்மை முழம்போட வருவான். ஏமாறுதே இதில்தான் உன் திரவசியைப் பார்க்கப்போகிறேன். இனி இவனைக் கால்தட்டவேண்டியது தானென்றாள்.

துரை ரங்கப்பிள்ளை:—தான் போஜனஞ்செய்து படுத்துக்கொண்டு துக்கித்திருக்கும்போது தங்கத்தை நினைத்துக்கொண்டு அவளுக் கென்னசொல்கிறது. முன்போல அவட்குக்கேட்பதற்கில்லையெனச்சொல்ல நேர்ந்ததே? அவள் விஷயத்தில் சுமார் முப்பத்தெண்

ஞாயிரம் ரூபாய்வரையிற் சிக்கிக்கொண்டது. அவர்களை 'கேட்பதுஞ் சரியல்ல, அப்படிக் கேட்டாலும் கொடுப்பது கடினம். துள்ளுமாடு பொதிசுமக்காதது போல ஆய்விட்டோமென்று குந்தினையா குரங்கே சந்தடி யடங்கவென வானேமென் றெண்ணினான்.

தனபாக்கியம் தன் தந்தையை வரவழைத்து அவர்களொன்றறியாததுபோல இச்சங்கதியனைத்தும் அவரிடஞ்சொல்லி மனவருத்தப்பட்டு துக்கிக்கையில் தன் மகள் செய்தது நல்ல தந்திரமென்றெண்ணி தன் மருமகனைப்பார்த்து என் அப்பா! நீ வருத்தப்படுகிறாய்? போனசொத்து வரப்போகிறதில்லை. இனிப் பிழைக்கும் வழியைப்பார்? சுவாமி உனக்குக்கொடுத்திருந்தும் பாதி துர்விஷயத்திலும், பாதி கள்ளர்கட்கும் தாரைவார்த்தாய். எல்லாத்துக்கும் நானிருந்து காக்கிறேன் எழுந்திரென்றான்.

துரை ரங்கப்பிள்ளை:—அன்று மாலை தளுக்குதங்கமிடம் முகவாட்டமாய்ச் செல்லுகையில் அவள் பார்த்து என்னங்கோ ஒரு மாதிரியாய் முகவாட்டத்துடன் வந்தீர்கள். என்ன சங்கதி சொல்லுமெனக் கேட்கையில், இவன் தன்வீட்டில்நடந்த சங்கதியைச் சொல்லி வருத்தப்பட்டனன். இவள் அதைக்கேட்டு அதுவும் எங்கள் பாக்கியந்தான். அதற்கு வருத்தப்படின் போனதுவருமா? தாங்கள் ஒன்றுக்கும் பயப்படவேண்டாம். எல்லாத்துக்கும் சுவாமியிருக்கிறான் காப்பாற்றவென்றுசொன்னாள்.

தாய்க்கிழவி:—ஏன் தம்பி! போனசொத்து ஒருபோதும் வாராது. இங்கே வருத்தப்பட்டு துக்கிக்கா

மல், நாளை காலையில் நீங்களிருவரும் பம்மதுகுளஞ் சென்று அந்த நிலங்களை வாரத்துக்கு தக்க மனுஷி யாளிடம்விட்டு வாரமுச்சிலிக்கா எழுதி வாங்கிக் கொண்டு அதைப் பயிரிடவிட்டு ஆகவேண்டிய வேலை களைப் பாரும். காலம்போய்விட்டால் எப்படி பயிரி டக்கூடும்? இது உமக்குத் தெரியாதா? வாராது வாராது யென்னபட்டும் வருவனபோகாது உன்னை விட்டும் எனக்கிழவி சொன்னாள்.

தளுக்குதங்கம்:—ஏன்னுங்கோ அத்தான் இதற் கேன் பயப்படுகிறீர்கள். நீங்களே இப்படிக்கி வருத் தப்பட்டால் நாங்களெல்லாம் எப்படி உஜ்ஜீவிப் போம். இறைக்கிறகிணர் எப்போதுஞ் சுரக்கும். இறைக்காதகிணர் அழுகல் நாற்றமெடுக்கும். தாங்கள் ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். இங்கிருக்க இப்படித் தான் வாதிக்கும் நாளை காலை கிராமத்திற்குப்போய் வாரத்துக்கு நிலங்களை விட்டு பயிரிட்டாலல்லவா? பின் னால் நமக்குப் பலன் தரும். என்னசொல்கிறீர் அதை யுரைத்தருளுமென்றாள்.

துரை ரங்கப்பிள்ளை :—தளுக்குதங்கத்தை கட்ட முது கட்டச்சொல்லி தான் தன்வீட்டிற்குச் சென்று மறுநாட் காலையில் இருவரும் பம்மதுகுளம் போய்ச் சேர்ந்து தங்கள் நிலங்களை அவ்விடம் வாரம் பயிரிடு வோர்களிடம் முச்சிலிக்கை எழுதி வாங்கிக்கொண்டு பயிர் செய்யும்படிவிட்டு தாங்கள் தங்கள் புது வீட்டி லிறங்கி கட்டமுதுபுசித்து அங்கு அன்றிரவு கழித்து விட்டு மறுநாள் காலையிற்புறப்பட்டுவந்து தங்களிடஞ் சேர்ந்து தான் தனது விட்டிற்குச் சென்றான்.

தாய்க்கிழவி :—தன் மகளை நோக்கி அடியம்மா! இனி இவனை நம்புவதிற் பயனில்லை. இவனிடங் கொடுத்து வைத்த திவ்வளவுதான். இப்போது வேறொருவனை நமது கைவசப்படுத்திக்கொண்டு காலங்கழிப்பதுதான் நலம் அந்த பார்ப்பான் வெங் கடாசமையரையுங்காணோம். அவன் வந்தால் தான் திருந்த கையைப் பிடித்துக்கொண்டு வந்துவிடுவான். இவன் விஷயத்தில் ஏமாறாது ஜாக்கிரதையாயிருந்து சால் கட்டி விடுவதைப்பார். குழந்தையை மாத்தி ரம் பத்திரமாய் வளர்த்திடென்றாள்.

தளுக்குதங்கம்:—தனது பங்களா மேல்மெத்தை ஹால் முழுதும் தனக்கு வைத்துக்கொண்டு, மெத் தைக்கடியிலும், மற்ற தனிக்கட்டடங்களில் எல்லா அறைகளையும் ஒன்றுகூட காலியில்லாமல் யாவுங் குடிக்கூலிக்குவிட்டு மாதமாதம் குடிக்கூலி பணங் கண்டுவந்தாள். துரை ரங்கப்பிள்ளை விஷயத்தில் தான் மனமிரக்கினவளாய்ப் பெருங் காயமிருந்த குடுக்கை வாசனை போக வொட்டாமல் வைத் திருப்பதுபோல கொஞ்சம் பக்ஷம் பாராட்டி தனக் குப் பக்கத்துணைக்காக இண்டி மாமாவாய் வைத் துக்கொண்டு பாதுகாத்து வந்தாள்.

இண்டி மாமாவெனில், எப்போதுங் கூத்தகை யாய் தாசிவேசிகள் வீட்டில் அடிமைத்தொழில் புரிப வர். அதாவது:—மஞ்சளரைக்கல், சீயக்காயரைக்கல், மிளகாயரைக்கல், நெல்லரிசி குத்துதல் மற்றுமுள்ள பணிவிடைகளைச்செய்தல், கடைக்குப் போய்வருதல், தூதுசொல்லல், தன்கூட திரிதல், தனக்குப்பின்

தனது சதையாய்வருதல், சாதஞ்சமைத்தல், கரி பதார்த்தஞ்செய்தல் முதலியனவாம். இவர்களும் ஒவ்வொருவேளை மற்றவர்க்கு டாபர்தனஞ்செய்தல், ஒருவர்க்கொருவரை கூட்டுறவுசெய்தலுமுண்டு. இவர்கள் பெண்களைப்போல் பேடித்தனமாய்த்தான் திரிதலும் அப்பெண்வேடந்தரித்தலுமாய் ருதுவான வீட்டில் பாட்டுபாடிக் கூலிக்குக கொப்பியடித்தல், செத்த வீட்டிற் கட்டியழுதல், ஆலையாண் புணர்தல், அரவாதம் இதுவே தொழிலாயிருப்பவர்க்குக் கோஜாவெனப் பலர் சொல்வதுண்டு. இவர்களுக்கு ஜாதிபேத முதலிய பலயினத்துவ மொன்றில்லை. இதிலும் சில பிராமண ஸ்திரீகளும் இவர்களைப்போல் நடித்து காலாவிட்டிலுள்பது முண்டு. கோஜாக்களும் இண்டிமாமா தொழில் புரியவல்லவரும் டாபர்களாய் சிலமாதர்களும் கூட்டிவைக்கக் குடும்பங்கலைக்க, கூட்டுறவுசெய்ய, தட்டுமாற்ற பலவிடங்களிற் சஞ்சரிப்பதுமுண்டு. அவர்கள் அப்பப்போது தட்டுபடுவர்.

துரை ரங்கப்பிள்ளை:—தான வெளியிற் சொல்லுகையில் தனக்கு முன்னம் டாபாராயிருந்து கூட்டிவைத்த வெங்கடாராமையர் இந்த சிமாளைக்கண்டு ஏலையா! பிள்ளையவர்கள் க்ஷேமமாயிருக்கிறீரா? என்ன சமாச்சாரம், அவர்கள் எவ்விதமிருக்கின்றார்கள். நான் அப்போது அவ்விடம் வந்துபோனதுதான் அதற்கப்பால் அந்த பால் போனதில்லை. நீங்களெல்லாம் எப்படி யிருக்கின்றீர்கள் சொல்லுமென்று ஐயர் வெகு அன்பாய் சொல்லென்று அவர்கள் சங்கதிகளியாவுங் கேட்கலுற்றார்.

வெங்கடராமையர் கேட்கையில் துரைரங்கப் பிள்ளை ஐயரே! அவர்கள் என் விஷயத்தில் வெகு பட்சமாய்த்தான் இதுவரையிருக்கின்றனர். அவர்கள் இரும்பைக் காந்தமிழுப்பதுபோல் பலவிஷயத்தில் அப்பப்போது அதுக்கு இதுக்கு வென்பதாய்ப் பறித்துக்கொண்ட ரூபாய் முப்பத்தியெண்ணூயிரம் சேகரித்துக்கொண்டனர். நான்தான் ஏமார்ந்தேன். தாங்கள் என்ன மறுபடியுக்காணேம். எங்கே போயிருந்தீர்கள். அது என்ன சமாசாரம் தங்கள் க்ஷேமத்தை யுரைத்தருளு மென்றான்.

துரை ரங்கப்பிள்ளை, கேட்பதற்கு வெங்கடராமையர் நான் கொஞ்சம்நாள் கும்பகோணம் போயிருந்து இப்போதுதான் இவ்விடம் வந்து இரண்டொரு மாதமாயிற்று. பிரபுக்களை இவ்விடங்கண்டேன். எனக்கு இப்படவா வஞ்சமுன்னடைகள் தொந்தரையதிகம். ஆனதைப்பற்றி நான் அப்படி இப்படி எங்கேயாகிலும் போகவரமுடிகிறதில்லை. இது எனக்குப் பெருஞ்சல்லியமாய் விட்டது. அப்படி அதைப் பார்க்காவிட்டாலும் நமக்குப் பதுக்கில்லை. இதுதான் சங்கதி, தஙகளைப் பார்த்தபோதே ஓர் பெரிய மலையைப்பார்த்தாப்போ லிருக்கிறதென் றகன்றன்.

## 5-ம் அத்தியாயம்.

தாய்க்கிழவி:—தன் மகளை நோக்கி என்னடி யம்மா! உன் மாப்பிள்ளை தன் கையிருப்பைக் கள்ளர் கொண்டுபோய் விட்டதேதான் ஒடுங்கிவிட்டான். இனி அவனாலே ஓர் செம்பாலடித்த காசுகூடப் பிரயோசனமில்லை. இன்னும் அவனை எதிர்ப்பார்ப்பதென்னத்திற்கு? நாம் ஜாக்கிரதையாய் வேறொருகையைத் தாட்டியாய்ப் பார்ப்பதற்கும் அந்த வெங்கடராமரையுங்காணோம். அந்த மகாராஜனால் நமக்கு எல்லாங்கிடைத்தது. நமது பொல்லாத வேளை அவனுக்கு இப்படி நேர்ந்ததென்றாள்.

தளுக்குதங்கம்:—ஏனம்மா தாயே! எனதாசைக் கணவனாலே சகல பொருளையுங் கைக்கொண்டோம். அதோடு திரவியமும் பலவிதத்திற் சேர்த்துவிட்டோம் அப்படியளித்த சீமானை நாமெப்படி கால் தட்டிவிடுகிறது. அது தெய்வத்துக்குதாறைப்புமா? ஆகிலும் பரவாயில்லை. இன்னும் சிலநாள் பார்க்கலாம். ஆனைபடுத்தால் அஸ்வமட்டம், அஸ்வம் படுத்தால் ஆடுமட்டம், ஆடுபடுத்தால் அம்மிமட்டம், அம்மியுடைந்தால் ஆழாக்குமட்டமாதலால், அவர் மனம் நோக நாம் விர்த்தியடையோ மென்றாள்,

தனபாக்கியம்:—தன் கணவனுக்கினியவளாய் மெத்தவும் விசுவாசமாய் சவரக்ஷணை செய்துவருவதில், புருஷனிடம் லலிதமாய்ப்பேசி, இனி நீங்கள் போனதைப்பற்றி வருத்தப்படாமல் மற்றுமிருப்பதைப் பத்திரமாய்ப் பாதுகாத்து உஜ்ஜீவிப்பதைப்

பார். தங்களுக்கு சிலர் எழுதிக்கொடுத்த பத்திரசத்திரங்களுக்குள்ளதைப் பரிசோதித்து 'எதை எப்படியெப்படி செய்யவேண்டுமோ அப்படியப்படி செய்வதுடன், நமது நிலம் நீர் காணிகரம்பு முதலியதை அழிக்காமல் அவைகளின் போக்கு வருத்துகளைப் பூரணமாய்ப் பார்த்து அததுகளின் பலன்களை அனுபவிப்பதைப்பார். நானும் வருகிறேன் நாமிருவரும் போய் அவைகளைப் பார்வையிட்டு வரலாம் வாவென்றழைத்தாள்,

துரை ரங்கப்பிள்ளை:—ஆமாம் பெண்ணே! குளத்தூரிலுள்ள நமது பயிர் நிலங்கள், தோட்டங்கள், துறவு, பங்களா, வீடு முதலியதும் பதினாயிரம் ரூபாய்க்குமேற்போகும். அதை நாம் போய்ப் பார்க்காதிருப்பதினால் அவர்கள் இட்டது பிச்சையாயிருக்கின்றது நாமிருவரும் இரண்டொருநாட் கழித்துப்போகலாம். அப்போதுதான் அதுவிர்த்திக்குவரும். அப்படிப்போய் நாம் பார்வையிடாவிடின் யாதொரு பிரயோசனமுமில்லை. ஆதலால் அதை அவசியம் போய்ப் பார்க்கலாம் வாவென்றாள்.

தனபாக்கியம்:—நாமிருவரும் நாளையன்றைக்கே போகலாம். அப்படிப்போய்ப்பார்த்து அங்குள்ள நடவடிக்கைகளைக் கண்டறிந்து அதை விர்த்தி செய்யும் நன்முயற்சியைச் செய்வதே நலமென்றுரைக்க, இவன் அப்படியே போகலாம். இப்போது என்னிடம் ஒளிக்காமற்சொல் என்னிடம் அரைக்காசு நீ கொடுக்கவேண்டாம் உன்னிடம் துகை என்னவைத்திருக்கிறாயென, அவள் நான்பலவிதத்திலுஞ் சேர்த்த

தொகை இரண்டாயிரத்திற்குக் குறைந்திருக்குமென்றாள். ஆனாலதை பத்திரமாய் வைத்துக்கொள் அதுதான் நமக்காதாரம் வீண்செலவு செய்து விடாதேயென்றான்.

துரை ரங்கப்பிள்ளை தளுக்கு தங்கமிடம் போவதற்கு இஷ்டமில்லாதிருந்தும் தானங்கு போகாதிருக்கில் ஏளனத்துக்கிடமாமென அன்றிரவு அவளிடஞ் சென்றான். அவள் இவனைக்கண்டு மெத்தவும் உபசரணைசெய்து நாயகா! நீயேன் வருத்தமாயிருக்கிறாய் உங்களுக்கு ஒரு குறைவும் வராது நீங்கள் பயப்படவேண்டாமென்று சொல்லுகையில், கிழவி வந்து என் தம்பி மருமகப்பிள்ளை ஒரு மாதிரியாயிருக்கிறீர் தைரியத்தை விடாதீர் எப்போதும்போல சந்தோஷகரமாயிருமென் றகன்றாள்.

தளுக்குதங்கம்:—தான் உத்தம தாசியாகையால் நாயகன் முகஞ்சோர்ந்திருக்கையில் அவன் மனதை தேற்றிமுற்றிலுங் கருத்துடையவளாய், அவன் துயரத்தை யகற்ற அந்த குழந்தையைக் கையிற்கொடுத்து அடி குழந்தாய் நீ நாயனுவோடு குலாவி அவரை சந்தோஷிக்கச்செய்யக்கூடாதா? உன் அதிர்ஷ்டம்நன்றாய் யிருக்கிறதென்று கொடுக்க அதைத் தான் வாங்கிக் கொஞ்சி சிலநேரம் பொறுத்து அதின் பசிக்கமுதளிக்கக் கொடுத்துவிட, இவள் அவனைக் கூடிச்சுகித்து சந்தோஷிக்கச் செய்து நெடுநேரம் அவன் துயரத்தை யாற்றி தன்மனம் பூரிக்கச்செய் துறங்கினார்கள்.

துரை ரங்கப்பிள்ளை:—மறுநாள் காலையில் நான் இன்று குளத்தூருக்குப் போகின்றமையால் இரண்டு

மூன்று நாளைக்கு வரக்கூடாமை பத்திரம்ஜாக்கி ரதையா யிருங்கள் கள்ளர்மேற் கியாபகமா யிருக்கட்டும். மற்றொருவரை நேசியாதே அவர்களுன்னை வஞ்சித்து மடிப்புமோசஞ்செய்வார்கள். இப்போதுங்களுக்குயான் கொடுத்தது போதும் இதில்மேலாசைப்படின் இருக்கிறதும் போய்விடும். அப்பால் வருவதுகடினம் நீ உன் தாய்பேச்சைக்கேளாதே அவள் மத்திமதாசியென விடுவிட்டகன்றான்.

வெங்கடராமையர்:—அதன் பிறகு தங்களிடம் வந்தான். அவனைத்தாய்க்கிழவிகண்டு மெத்தவும் விசுவாசமாய் உபசரித்து தாங்கள் எங்கேசாமி பார்ப்பதற் கரிதாய்விட்டீரென ஐயர் யான் கும்பகோணம்போயிருந்து இப்போதுதான்வந்தேன் என்ன சமாச்சாரம் எப்படியிருக்கிறீர்கள். இந்த குழந்தையேது உன்மகள்பெற்றதா? சொல்லென, கிழவி இது வாங்கிவளர்ப்பது துரை ரங்கப்பிள்ளை தூங்கிவிட்டார் வெறு நல்லவகையொன்று பிடித்துவரதங்களை எங்குதேடியும் காணமற் போனோம். எங்களுக்கு நல்ல காலமாக்கும் தாங்கள் வந்து சந்தித்ததென வர்ணித்தாள்.

தளுக்கு தங்கம்:—சுவாமி! அப்படி தாங்கள் பார்க்கும் விஷயத்தில் அவசரப்படாமல் நிதானித்து நல்ல யோக்கியனைப் தாருட்டியமுள்ள சிமானைப் பாருங்கள். மற்ற தெம்மாண்டைகள் வேண்டாமென்றாள். அடி தங்கம்! அப்படியே உன்னிஷடம் போல நிறைவேற்றி வைக்கத் தடையில்லை ஆனால் என்பேரில் மாத்திரம் கியாபகமிருக்கட்டும் நானே

உங்களை நம்பியிருக்கின்றவன் இப்போது எனக்குக் கொஞ்சம் செலவுக்குக் கொடுக்கவேண்டுமெனக் கேட்டு வாங்கிக்கொண்டு போய்விட்டனர்.

துரை ரங்கபிள்ளை:—தனபாக்கியத்தை யழைத்துக்கொண்டு கோச்சிலேறிக் குளத்தூருக்குச் சென்று அந்தவூர் நிலங்கள் முழுதும் போக்குவரத்து கணக்குப்பார்த்து அதுகளை தக்க மனுஷியாளிடம் வாரமுச்சிலிக்கை எழுதிவாங்கி சாகுபடிசெய்ய விட்டு தோட்டம், தோப்பு முதலியதை தக்கபடி குத்தகைப்பேசி விட்டு, பங்களாவிற் போனது வந்ததுகளை ரிப்பேர் செய்யும்படி தாக்கீது செய்து தனக்குள்ள வேலைகளை 20-நாளிருந்து எல்லாமுடித்துக்கொண்டு தாங்களிருவரும் சந்தோஷமாய்க் கூடிக்குலாவியிருந்து அவ்விடம விட்டுப் புறப்பட்டு தங்கள் வீடுவந்து சேர்ந்தார்கள்.

தனபாக்கியம்:—அதுமுதல் தன் கணவனை அகல விடாமல் பாதுகாத்துவந்ததிலும், தன் கணவனுக்குத் தாசிகளேற்றிய மருந்து தலைமண்டைக்கேறி பிடிப்பதைத் தான் தந்திரமாய் முறித்து தனது சொற் கேட்டு இருப்பதற்குத்தக்கபடி முயற்சிசெய்து தன் குழந்தைகளையும் காப்பாற்றிவந்ததில், இவனுக்கு ஞானமுதித்து விடுபொருந்தி தாசிவேசிகளைமறந்து தன் குடும்பத்தைக்காக்க நினைத்து தன் மனைவியைப் பிரியமுடன் நேசித்துதம் பிள்ளைகளைக் காப்பாற்றிக் கொண்டிருந்தான்.

துரை ரங்கப்பிள்ளைக்குத் தாசிவேசிகளேற்றிய மருந்துகளைப் பரிசைசெய்ய அவன் உள்ளங்கையில் பாலையிலை சாற்றை விடுகையில், அது தொய்ந்துவிட்

டதுமன்றி மறுபடியும் அன்றிரவில் கொஞ்சம் வெந்தயத்தை அவன் வாயிற்போட்டு சிரங்கை தண்ணீர் குடிப்பித்துப் படுக்கவைத்து மறுநாட்காலையில் அவன் மலத்திற்பார்க்கையில், அம்மலத்தில் வெந்தயமெல்லாம் முளையுருவியிருந்தமையால் வாஸ்தவத்தில் அவனுக்கு வயற்றில் மருந்திருப்பதாய் நிச்சயித்தனள். சிலர்க்கு சூட்டினல்கூட மருந்தேற்றியில்லாவிட்டாலும் தேகவெப்பத்தினலும் வெந்தயம் முளையுருவியிருப்பதுமுண்டு அதை யொரு ஆஸ்பதமாய் நம்புவதும் தப்பு. இதைக் கண்டிதமாய் நிஷ்கரிஷை செய்யவேண்டுமெனில், "நாணிட்டமருந்து போகவொட்டாது நன்னாரிவேரு சாகவொட்டாது" என்னும் பழமொழிக்கிணங்க அந்த நன்னாரிவேரைச் சூரணஞ்செய்து அதை வெறுகடி அதாவது மூன்றுவிரல் கொண்ட பிரமாணம் அதிகாலையில் வாயிற்போட்டு கொஞ்சம் தண்ணீர் குடிப்பித்துவிட அவனுக்குமருந்தேறியிருக்கில் உடனே பேதியாகிவிடும் அல்லது வாந்தியாகினு மாகிவிடும் அப்படி மருந்தேற்றியில்லாவிடின் பேதியுமாகாது ஒருவேளை வாந்தியுமாகாது.

அம்மருந்தை முறிக்கவேண்டிய பட்சத்தில் அந்தச் சூரணத்தையே நாலைந்துநாட் காலையில் அதையே கொடுத்துக்கொண்டே வரவும் பேதியாகாவிடின் அம்மருந்து வெளிப்பட்டு விட்டதாய்க் கருதி அதை நிறுத்திவிடவும். அந்த நன்னாரிவேரில் பலர்க்கும் மருந்துவைக்கத் தெரியுமேயன்றி அதனலேயே அதை முறிக்கத்தெரியாதென்பதுண்மை.

முற்றிற்று.

# பரத்தையர் மாலை.

பாய்க்கிழவி யெனக்கிடக்கும் பரத்தைமார்க்குப்
பணம்பறிக்கும் புத்திசொல்லும் பாவியான
தாய்க்கிழவி பொய்யெல்லா மெய்யதாகச்
சாதிக்குங்கிழவிமயல்தா னுண்டாக்கும்
பேய்க்கிழவி மூதேவி வடிவமான
பிணக்கிழவி நாய்போலப் பிடுங்கித்தின்னும்
வாய்க்கிழவி மாயவலைக்குள்ளாகாமல்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (1)

கடைக்கிழவி தன்வீட்டில் வந்தபேரைக்
கடையாக்குங் கிழவிமுட்டிக் கழுதைபோல
நடைக்கிழவி மாயமயற்கிழவி பொல்லா
நரைக்கிழவி யிளைஞோர்க்கு நமன்போல்வந்த
கிடைகிழவி தான்கற்ற வினையால் வெந்து
கெடுங்கிழவி பரத்தையர்க்குத் தாயாரான
மடைக்கிழவி மாயவலைக் குள்ளாகாமல்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (2)

கொலைக்கிழவி மருந்தாலு மிளைஞோர்தங்கள்
குடிகெடுக்குங் கிழவிநரைக் கோலமான
தலைக்கிழவி பேராசைக்கிழவி நல்ல
சாராயந்தனக்குமகள் தன்னைவிற்கும்
புலைக்கிழவி குணங்கெட்ட கிழவிமண்ணைப்
போங்கிழவி பரத்தையர் தாய்க்கிழவி மாய
வலைக்கிழவி மாயமயற்குள் ளாகாமல்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (3)

நினைக்கிழவி கண்கெட்டகிழவி பேசும்
திடக்கிழவி பிள்ளைநோரைத் திருடராக்கும்
வினைக்கிழவி பாசாங்குக்கிழவி பெத்த
வினைக்கிழவி பழக்கிழவி வீம்புபேசும்
கனக்கிழவி கொடுங்கிழவி பணத்தையெல்லாம்
கைப்பற்றுங் கிழவியில்லை மாதர்தங்கள்
மனைக்கிழவி தேகத்துக் குள்ளாகாமல்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (4)

பரத்தையரோ டிணங்கிற் பாவமேலாம்
பரலோகங் கிடையாது பணமும்பாழாம்
இரப்பதினுங் கடையாவர் கிரந்திநூலை
இளவயதிலேபிடிக்கு மிருமலுண்டாம்
உரத்திடும் பாஷாணத்தாற் காழ்வனைப்பால்
உப்பிருந்த பாண்டம்போ லுருத்தப்போகும்
மரத்திலெனும் பரத்தையரை விட்டுநீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (5)

பச்சைசப்பாம் புலர்த்திபதின் ரசமேனெடோக்கப்
பசுமஞ்சள் கழுகிருந்த பச்சையோந்தி
ரச்சத்தை வாங்கிநன்று புலர்த்திக்கொண்டே
இவையெல்லாம் பொடிபண்ணி யெடுத்துக்கொண்டு
காசப்பூண் முலைதனிலே கீழ்மேற்பூசிக்
கனகமெல்லாந் தங்களிட மைச்சுள்ளாக
வைச்சுப்போ மெனும்பரத்தை மாசைநீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (6)

நாய்த்தலையின் மூளை குழிநரிப்பிச்சுச்செந்
    நாய்ப்பாலுங் குரங்கீரனாலுங் கூட்டித்
தோய்த்தகழுதைப்பாலி லுரைத்துச்சங்கின்
    சுண்ணாம்பினிற் கலந்தேயுண்டை சேர்த்துக்
கார்த்தநறுஞ் சாதிக்காயேலம் பச்சைக்
    கர்ப்பூரப்பொடியின் மணங்கட்டி வைத்து
வாய்த்தமருந்திடும்பரத்தை மாரைநீங்கி
    மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (7)

நாய்க்கடுகு சிறுபூளை சிவனார் வேம்பு
    நல்லெண்ணெய் விளக்கெண்ணெய் நாவற்பட்டை
பேய்க்கழுதை முதுகினிணங் கழுவன்காலின்
    பெருவிரலி னகஞ்செத்த பிணத்தினாற்றை
தாய்க்கிழவி செவிக்குறும்பி யிவைகளெல்லாம்
    சங்கினிடச் சுண்ணாம்பு தன்னிற்கூட்டி
வாய்க்கமருந்திடும்பரத்தைமாரை நீங்கி
    மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (8)

சேலையென்பார் பணமென்பார் சிந்தாக்கென்பார்
    திருநாளிற் செலவெல்லாஞ் செய்யுமென்பார்
ஓலையென்பார் பறித்துக்கொண்டுள்ளே போவார்
    ஓங்கியதாய்க் கிழவிசற்றே முட்டாளென்றும்
பாலையும் நீரையும்பிரிக்கு மன்னம்போலப்
    பகுந்துண்ணும் பரத்தையரைப் பரவலாமோ
மாலயனும் போற்றுகின்ற கண்டத்தானை
    மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (9)

ஒருவனைமுன் மடியின்மே லுறங்கப்பண்ணி
ஒருவனுக்குச் செங்கனிவா யூறற்றேக்கி
ஒருவனையப்பாலிருத்தி யுறவுபேசி
ஒருவனுக்கு முலைகாட்டி மயலைப்பூட்டி
வருமிளைஞோ ராயிரம்பேரொரு காலத்தில்
வந்தாலு மாயமிடும் பரத்தைமாரை
மருவுசுக போகத்தை மறந்துநீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (10)

சிலபேரை மெத்தையின்மே லிருத்திக்கொண்டு
சிலபேரைமுற்றத்தே செல்லவிட்டுச்
சிலபேரைத் தெருவாசற் புறம்பேவிட்டுச்
சிலபேரைத் தெருத்தோறுந் திரியவிட்டு
மலிவாசற்காரர் தம்மைக்காய்ச்சலோடு
வளவிலே கிடந்துழல வருத்திமாய
வலைவீசும் வேசியரை மறந்துநீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (11)

ஊர்க்குநீர் போனநாண் முதலாவேறிங்
கொருவருடன் பேச்சுமில்லை யுறக்கமில்லை
யார்க்குநா னிதையுரைப்பேன் பெற்றதாயும்
அடுத்தவரும் பகையாக வாசைகொண்டேன்
தீர்க்குமருந் தறியீரோவென்று நாப்பித்
தெட்டுவார் பணம்பறிப்பார் திருட்டுவேசி
மார்க்குநீ மனமுருகிமயங்க வேண்டாம்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (12)

நாய்பிடுங்கு முலையைநல்லகிரி போலென்றும்
　　நரிபிடுங்கு மிடைசிங்க விடைபோலென்றும்
சீழ்பிடுங்கு மூக்கைசெண்பகம்போ லென்றும்
　　சிதைப்பண்ணும் செம்மயிர்க்கார்மேக மென்று [ம்
மிதிக்குங்காலை யத்திக் கனிபோலென்றும்
　　பித்தேறி யிப்படியே பிதற்றிக்கொண்டு
மாய்ந்துதிரிந்தேநரகுக் கிடாகாமல்
　　மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (13)

பாவவினைக்கொடுமையினுற் பரத்தைமார்க்குப்
　　பல்கா லுங்கொடுத்தழிக்கும்பணத்தையெல்லாங்
கோயிலுக்குக் கொடுத்தாலும் பலனேயுண்டு
　　குருவுக்குக் கொடுத்தாலுங் குறைவராது
நாவலர்ச்குக் கொடுத்தாலும் நீதியுண்டு
　　நல்லோர்க்குக் கொடுத்தாலும் பலனேயுண்டு
வாவிவாழ்பரத்தை யரைவிட்டு நீங்கி
　　மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (14)

முலைகாட்டி முலையில்வைத்த குறியுங்காட்டி
　　முகங்காட்டி விளக்கிபன் முழுதுங்காட்டிக்
கொலைகாட்டி நெருங்கடைக்கண் சற்றேகாட்டிக்
　　கொஞ்சுகிளி மொழிகாட்டிக் கூறியல்குல்
விலைகாட்டித் தெருத்தோறுந் திரியுமந்த
　　வேசியரைக் கூடமனம் விரும்பலாமோ
மலைகாட்டு முலைப்பரத்தை மாரைநீங்கி
　　மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (15)

பரத்தையரே வற்பாமற் பறிக்கும்வேடர்
பரத்தையரே குடிகெடுக்கும் பகைவராவர்
பரத்தையரே தருவினையிற் பக்கஞ்சொல்வார்
பரத்தையரே பாக்கொடு பாஷாணமீவார்
பரத்தையரே பஞ்சபாதகமுஞ் செய்வார்
பரத்தையரே புறம்பேசும் பழியும்பாரார்
பரத்தையரோ டிணக்கமுற்ற பாவம்போகப்
பயின்மறைக்காட் டீசர்பதம் பணிந்திடீரே. ()

பாராயமாயமஞ்சள் வாடை பூசிப்
பலநாளும் பொய்சொல்லிப்பணத்தையெல்லாஞ்
சாராயந்தனக்கு விலையாக நல்கிச்
சாலவுந்தான் கொடுத்தவாய்த் தயக்கிவாங்கிப்
பேராசையுடன் குடித்து வீதிதோறும்
பித்தடைந்து திரிபரத்தை போகத்தின்பம்
வாராதுன்பம்வரு மவைநீக்கி
மறைக்காட்டி லெம்மானை வணங்குவீரே. (17)

பணத்தினால் வசமாக்கப் படுவதல்லாற்
பாவமொருவடிவான பரத்தைமாதர்
குணத்தினால் வசமாக்கப் படுமோநல்ல
குலத்தினால் வசமாக்கப் படுமோமாந்தர்
கிளைப்பினால் வசமாக்கப்படுமோ சற்றும்
தேகத்தால் வசமாக்கப் படுமோவுத்திப்
பணத்தினாலவர்போக மோகநீக்கிப்
பயின்மறைக்காட் டீசர்பதம் பணிந்திடீரே. ()

பெற்றதாய் முகத்தணிந்த நகையானாலும்
பெண்டாட்டி தனக்கிட்ட நகையானாலும்
உற்றதவத் தொருகுழந்தை பணியானாலும்
உடுத்துவைத்த பழம்புடவையே யானாலும்
தெற்றெனவே கவர்ந்துபோய்ப் பரத்தைக்கீந்து
சிக்கெனத்தாய் தந்தையரைத் தெருவேகண்டால்
வற்றன்மரம் போனின்று மயங்கிடாமல்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (19)

பரத்தையர்தங் கபடறிந்து தம்மைத்தாமே
பரிகரிக்க வேண்டுமென்று பரிவாலன்றோ
கரத்தின்மழு வுடையபிரான் கவுரிதன்னைக்
கருதியொரு பாலமைத்தான் கரியமாயன்
சிரத்தையுடன் மலர்மகளை மார்பிற் சேர்த்தான்
தேவிதனை நாவிலயன்சேர்த்து வாழ்ந்தான்
வரத்திலவர் மாயவலைக்குள் ளாகாமல்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (20)

பணந்தானே குலங்கல்வி பரத்தைமார்க்குப்
பணந்தானே பழகிளமை பரத்தைமார்க்குப்
பணந்தானே குணமுழுதும் பரத்தைமார்க்குப்
பணந்தானே சுகபோகம் பரத்தைமார்க்குப்
பணந்தானே யலங்காரம் பரத்தைமார்க்குப்
பணந்தானே பஞ்சுமெத்தை பரத்தைமார்க்குப்
பணந்தானே கொடுத்தணைந்தால் பாவம்போகப்
பயின்மறைக்காட் டீசர்பதம் பணிந்திடீரே. (21)

செய்யாத வஞ்சனைகள் செய்வார்தம்மைச்
சேர்ந்தவர் கைப்பொருளையெல்லாஞ் சேரக்கொ
பொய்யாணையிடச்சற்றுங் கூசார்வேண்டும் [ள்வார்
பொருள்கொடுத்தாற்புலையரொடு போகஞ்செய்
கையாசையன்றி வேறாசை கொள்ளார் [வார்
கண்ணும் பரத்தையரைக் காணலாமோ
மையாருஞ்சுருளோதி பாகத்தானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (22)

கண்டாரை வரவழைத்துக் கொண்டுட்சென்று
கட்டின்மெத்தை மீதில்வைத்துக் கண்கைகாட்
பண்டொருநாள் வந்தீரென் றிதமதாகப் [டிப்
பசப்பியேபாஷாண வுண்டைபாய்ச்சி
உண்டான பொருளையெல்லாங் கைக்குட்பற்றி
உபாயத்தாற் குரங்காக்கி யோட்டுவார்காண்
மண்டாருங் குழலுமையாள் பாகத்தானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (23)

சாதிகுல முறையில்லை தயவோவில்லை
சதிபாவஞ் சற்பனைகள் சாலவுண்டு
நீதியில்லை குற்றமில்லை நினைக்கும்போது
நினைவெல்லாங்குடிகெடுக்கும் நினைவேகண்டீர்
பாதியுலகளித்தாலு மென்ன தந்தீர்
பத்தாதென் றேயுரைக்கும் பரத்தைமார்கள்
வாதனையிற் றிரிந்துழன்று மயங்கவேண்டாம்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (24)

கடன்காரர்க் கைம்பதுபொன் கொடுக்கவேண்டுங்
கைமாற்று யைந்துபணங் கொடுக்கவேண்டுங்
குடங்காறுஞ் சாராயமளந்து வாங்கிக்
குடித்தபணம் பதினைந்துகொடுக்க வேண்டும்
இடங்காரனுங்கொடுக்கவென்றுலிதற்கென் செய்வோ
மென்றுதெட்டி மெள்ளமெள்ள விதமாய்வாங்கு
மடங்காத பரத்தையரை மறந்துநீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (25)

ஒருபொழுதும்பிரிந்திருக்க மாட்டோமுப்பத்
தொருநாள் விட்டெப்படி நீருறங்கப்போனீர்
இருவருக்காநேத்தின்று கூடினோமோ
எத்தனைகாலங் கூடியிருந்து வாழ்ந்தோம்
பருவமிது கிடைக்குமோ பாரீரென்பார்
பசப்புவார் பணம்பறிப்பார் பரத்தைமாரை
மருவுவதுஞ் சருவுவதும் வேண்டாமெங்கள்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (26)

தாய்சலிக்க வேசியர்க்குக் கொடுத்துக்கெட்ட
சாய்குடியோனைக்கிழவி சற்றேகண்டால்
ஏசலுக்குவந்தீரோ வொருகாசுக்கும்
இடமில்லா வெறுங்கூடரிங்கேன்வந்தீர்
பூசலுக்கு வந்தீரோ மதிகெட்டீரோ
போக்கிடம்வேறில்லையோ போம்போமென்று
வாசலுக்கு வரவொட்டா ரவரைநீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (27)

கருதரியகனியிருக்கச் சிறுகாய்தேடிக்
கையிலேகரும்பிருக்க வேம்புதேடித்
தெரியவிளக்கிருக்க மின்மினியைத் தேடித்
தேனிருக்கச்சாராயந் தேடுவார்போற்
பரிவுடையமனையாட்டி யிருக்கமாயப்
பரத்தையரைத் தேடிநொந்து பணமுந்தோற்று
மருவுபெரும் பாவிகளாய்ப் போகவேண்டாம்
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (28)

தெள்ளமுதமிருக்க விஷந்தேடிவாழை
செய்யகனியிருக்கக் காஞ்சிரங்காய்தேடி
வெள்ளிலை பாக்கிருக்கத் தம்பலம்போய்த்தேடி
மெல்லியபொற் கலையிருக்கக் கந்தைதேடி
உள்ளதிருமாதுபோ லுலகுங்கற்பும்
உள்ளமனை யாளிருக்கப் பரத்தைமார்க்கு
வள்ளியகைப்பொருள்கொடுத்து வருந்தவேண்டா
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (29)

காட்டுக்கே யெறிந்தநிலா பெருகுமாற்றிற்
கரைத்தபுளி கமர்வெடிப்பிற் கவிழ்த்தபால்பாழ்
வீட்டுக்கே யிடும்விளக்கு வெள்ளமாக
விழலுக்கே யிரைத்ததண்ணீர் வேம்புக்கேதான்
சேட்டுக்கே சொரியசுந்தேன் பரத்தைமார்க்குச்
செய்தநன்றி யவ்வாறுஞ் செப்பலாகும்
மாட்டுக்கே யேறிவரு மெம்பிரானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (30)

கற்றதெல்லாம் பொய்சூது கபடுதானே
கள்ளமயல் பொருந்திநிற்குங் கபடிகட்கே
எத்தனைதா னுபகாரம் பண்ணினாலும்
எப்போது மனதுதய வில்லாதார்காண்
செத்தபிணமானாலும் பொருளைக் கண்டால்
சிக்கெனவே தழுவிமெள்ளச் செய்வார்போக
மத்தகச முகத்தானை யளித்துளானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (31)

முன்னொருவன்வாயிற் றம்பலத்தை வாங்கி
முசியாமற் றங்களிடவாயிற் கொண்டு
பின்னொருவன் வந்தவுடனவன்வாய்தன்னில்
பேதமறவுமிழ்ந்து நலம்பேசிப் பின்னுந்
தன்னினங்கள் கேட்டவர்க்கு மிந்தச்சேதி
தாராதபரத்தையரைத் தழுவலாமோ
மன்னுகின்ற நஞ்சுறையுங் கண்டத்தானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (32)

தெருவிலே புறப்படுவார் முலையைச்சற்றே
திறப்பார்மெத்தெனநடப்பார் திரும்பிப்பார்ப்பார்
உருவிலே யிளையோரைப் பார்ப்பாராசை
யுள்ளவர்போன் மயங்குவாருடன் மேல்வீழ்ந்து
சருவுவா ரழைத்துக்கொண் டுள்ளேபோவார்
தாம்பொருந்தும் பணவிலைக்குத் தக்கதாக
மருவுவார் பரத்தையரைவிட்டு நீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (33)

காலுக்குக்காலாழியெங்கே கைக்குக்
கடகமெங்கே சவுளியெங்கே கடுக்கனெங்கே
பாலுக்குப் பசுவெங்கே யெருமையெங்கே
பண்ணைக்கு மாடெங்கே பவளமெங்கே
மேலுக்கு மஞ்சளெங்கே யென்று தேட்டி
மெள்ள மெள்ளப்பறிக்குமந்த வேசியாரை
மாலுக்குத் துணையென்று நம்பவேண்டா
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (34)

வேசியர்க்கு நெஞ்சிரக்கஞ் சற்றுமில்லை
வேசியர்க்குச் சாதிகுலந் தானுமில்லை
வேசியர்க்குச் செய்தநன்றி யறிவதில்லை
வேசியர்க்குப் பொய்யல்லான்மெய்யொன்றில்லை
வேசியர்க்கு நிறைபொறுமை நாணமில்லை
வேசியர்க்கு விதரணமோ மிகுதியில்லை
வேசியர்க்குப் பணங்கொடுத்து விரும்பவேண்டாம்
விமலர் மறைக்காடர்பதம் விரும்புவீரே. (35)

இந்திரனே யானாலுங் கொடுப்பதொன்று
மில்லையென்றா லவரைவெறுத்தீன ரென்பார்
கொந்துலகிற் புலையர்தா மெவரென்றாலுங்
கொடுப்பவரே தங்கள்குல தெய்வமென்பார்
சுந்தரமாய்க்கையிலுள்ள பொருளையெல்லாஞ்
சுத்தவட்டை போலிருந்து சுற்றிக்கொள்வார்
மந்திரமுந் தந்திரமு மருந்துமான
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (36)

வீட்டிலே வலியவந்து நயங்கள்பேசி
விழிகாட்டி முலைகாட்டி விகாரம்பூட்டி
கோட்டிலே சிறந்தமறப்பாவை போலே
குதித்து நிதியுள்ளதெல்லாங் கொள்ளைகொண்டு
நாட்டிலே போய்பிழையு மென்றுசொல்லி
நழுவிப்போம் பரத்தையரை நம்பவேண்டாம்
மாட்டிலே யேறிவரு மெம்பிரானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (37)

மூக்கிலேபித்தளை மூக்குத்திகண்டீர்
முலையிலே பலபேருங் கிளக்கண்டீர்
பாக்கிலே பாஷாணங் கலப்பார்கண்டீர்
பாயிலே பலபேரும் படுப்பார்கண்டீர்
நாக்கிலே சாராயநாற்றங் கண்டீர்
நாடோறும் பணம்பறிக்கு நயமுங்கண்டீர்
வாக்கினிலும் பரத்தையரை விட்டுநீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (38)

ஒருத்தியெனக் கெதிரான வீட்டுக்காரி
ஒருமாதத்துக் கெழுபதுபொன் னுடைமைநாறும்
பருத்தூறுந்திலதவன்னச்சேலை பத்தும்
படிநூற்றுக் கலநெல்லும் பற்றினாள்காண்
திருத்தியதிலேபாதி மாதமாதம்
சிக்காமாற்றூருமென்று தெட்டிவாங்கி
வருத்துகின்ற பரத்தையரை விட்டுநீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (39)

பேச்சென்று லபிர்தம்போற் பேசுவார்கள்
பேய்மடவா ராசைகொண்டாற் பொருள்களெல் [லாம்
ஆச்சென்று லகத்தினைவிட் டப்பாலோட்டி
அதற்கேற்ற பேர்களைக் கொண்டடித்துதள்ளிப்
பூச்சென்று லெரியுமந்தக் கைகளாலே
பெருங்கல்லை விட்டெறிவார் பொதுவின்மாதர்
மாச்சிறைந்த புகழுடைய வெம்பிரானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (40)

பாக்கிலே மருந்தையிடும் பரத்தைமாரை
பலகாலுஞ் சேர்ந்திருந்து பணமுந்தோற்று
மூக்கிலேயிடிவிழுந்து குணகுணென்று
முழங்காலிற் சூலைவந்து முடவனாகி
நாக்கிலேமருந்தூறி யாவர்க்கும்
நப்பாமற் பேச்சுரைக்கு நரகுக்கீடாய்
வாக்கிலே பரத்தையரையுரைத்தல் நீங்கி
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (41)

பணந்தானே பறிக்கின்ற பரத்தைமாரே
பலநாளி லுயிர்பறிக்கும் வேசிமார்காண்
குணந்தானே யிரக்கமாய் வணங்கிப்பேசும்
குணமெல்லாங் குடிகெடுக்குங் கொள்கைதானே
தினந்தானே பரத்தையரைச் சேர்ந்தால்மெத்த
தீங்குவருஞ் செய்தொழில் போந்திருடராவார்
வணங்காத புரமெரித்து விடைமீதேறு
மறைக்காடி லம்மானை வணங்குவீரே. (42)

சூதுவினை சதிபாவமெத்த வுண்டு
சொல்லவினி முடியாது பரத்தைமார்க்கு
வாதுகளுங் கபடுகளுமயக்கச் சொல்லும்
வல்லடியு மெத்தவுண்டு பரத்தைமாருக்
கேதுசற்று நீதியில்லை நிலைமையில்லை
எச்சலில்லை வெட்கமில்லை பரத்தைமார்க்கு
மாதுமையா ளொருபாதி யெம்பிரானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (43)

மெழுகோடே கோழிமுட்டை கலந்துகூட்டி
மினுக்கி முகமுலைக்கு நல்லமஞ்சள் பூசிக்
கழுகோடேயிருக்குமந்தப் பிணமென்றாலுங்
கையிலேபொருள் கொடுத்தாற் கலந்துபோகம்
வழுவாதே செய்யுமந்தப் பரத்தைமாரை
வருந்தியே பொருள்கொடுத்து மாயவேண்டா
மழுவேந்துங் கையானை யெம்பிரானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (44)

தேவடியாளொருத்தியவ ளனேகம்பேர்க்குத்
தினந்தினமும் பெண்டெனவே சேர்ந்துகூடி
நாவடியிருக்குமந்த வுதட்டிலேதான்
நல்லமிர்த மிருக்குமென்று நாய்போல்பற்றிச்
சோகைவடி வாகியே பிணிநோய்கண்டு
தொல்லுலகிற் றேஷிகளாய்த் திரியவேண்டாம்
மாவடியி லிருக்குமந்த வெம்பிரானை
மறைக்காட்டி லம்மானை வணங்குவீரே. (45)

முற்றிற்று.

# தாய்க்கிழவிகள் தளுக்கு.

நஞ்சை யொக்கும் வஞ்சகமே ஒருருவாய்த் தோன்றிய தன்ன கள்ளமனதைக் கொள்ளை கொண்டிருக்கும் கணிகை மாதர்களின் அருமை செவிலித்தாயரென அரும்பெயர் பூண்ட தாய்க்கிழவிகள் (பறவைதேடி கன்னியின்மேல் இலக்குவைத்து திரியும் வேடுவனேபோல்) ஆடவரைதம்மாயவலைக்குள் சிக்க வத்து காமபித்தேற்றி அடிமைகொள்ளும் அவர்களின் அதியற்புத தந்திரோபாயங்களும் சாகசம் பெருத்த சமத்காரமும் வஞ்சகமிஞ்சிய கருத்துகளும் அதனுல் பால்யரடையும் சீர்கேட்டையும் இன்னதென்று வெள்ளிடை மலைபோல் கூறும்.

தவிர தாய்க்கிழவிகள் தம்மக்களுக்கு இளமையி லிருந்தே "அப்பன்வருவான் அதன்பின் மகன்வருவான் தப்புமுறை என்று தள்ளாதே" என்பது முதலிய போதிப்பிக்கும் திவ்விய மந்திரோபதேசங்களையும் சதிகர்ப்பனைகளையும் விளக்கும்.

விலை அணு 8

# ஸத்வைத்ய ஜீவனம்.

இது நூதனமாய் கற்பிக்கப்பட்டதல்ல! பலநூற்களினின்றும் கைப்புரட்டு செய்ததுமல்ல!! உதவாத ஆபாச-பொய்யான முறைகளடங்கியது மல்ல!!! அநேக நூற்றுண்டுகளுக்கு முன் 'லோலிம்ப ராஜு'' என்னும் மகரிஷியால் வடமொழியில் (ஸமஸ்கிருதம்) இயற்றப்பட்டது. வடமொழி நூல்களில், சரகம், சுஸ்ருதம், பாகடம், பகவராஜீயம், சிந்தாமணி முதலிய வைத்திய சாஸ்திரங்களே தலைமையாய் விளங்குவன; அவையெல்லாம் மிக விரிவாய் இருத்தலினுல் அவற்றின் முக்கியமான-அருமையான முறைகளை மாத்திரம் ஒரு சேரத்திரட்டியதாகும். இந்த வைத்திய சாஸ்திரத்தில் சகலவித நோய்களின் நாடியும், குணமும், மிகச் சுலபமாய்த் தெரிந்துகொள்ளும் வழியும் ஒவ்வொரு நோய்க்கும் பலவிதமான சிகிச்சைகளும் சொல்லப்பட்டி ருக்கின்றன. விலை அணு 8.

---

மயிலாப்பூர் டிரேடிங் கம்பெனி,
மயிலாப்பூர் போஸ்டு, மதராஸ்.

# பெண்கள் நீதி விளக்க வினாவிடை.

## வாசுகி முதலிய அழகிய ஆப்டோன் படங்களடங்கியது விலை அணா 12.

இந்நூல் ஒவ்வொரு பெண்மணிகளிடத்தும் அவசிய இருக்க வேண்டியதொன்று. இதனில் பெண்கள் தாம் க பொழுக்கங்களிற் சிறந்து விளங்குதற்கு அவசியமானது அரி நீதிகள் அநந்தம் எழுதப்பட்டிருக்கிறது. பண்டைய நீதிநூல் களினின்று அநேக அரிய மேற்கோள் எடுத்தெழுதி யிருப்ப தோடு அவற்றின் உரிய கருத்துக்களையும் விளக்கப்பட்டிருக் கிறது. பெண்களுக்கு மாத்திரமல்லாமல் சிறுமிகளும் இதைப் படிக்கும்படி செய்தால் நல்லொழுக்கங்களிற் சிறந்து விளங்கு வார்கள்.

இந்நூலின் விஷயங்களுள் சில:—

பெண்கள் தாயைப்போல் அன்புடையவர்களாக இருக்க வேண்டும்.

அன்பில்லாத ஓர் மனைவியால் அன்புடையவர்களுக்கு நேர்ந்த கெடுதி.

அன்பில்லாத ஒரு பெண் தன் வீட்டில் அமுதுண்ண வந்த அடியார் ஒருவரைத் தந்திரமாக விரட்டியது.

அன்பின்றி செய்யப்படும் எவ்வித உதவியும் பலனைத் த மாட்டாது.

பெண்கள் வேலைக்காரியைப்போல மனஞ்சலியாமல் க மையாக தம் வீட்டு வேலைகளைச் செய்யவேண்டும்.

பெண்கள் குடும்பத்தில் நேரிடும் சகல கஷ்டங்களையு பூமாதேவியைப் போல பொறுக்கவேண்டும்.

கீரிப்பிள்ளையை வளர்த்த ஓர் மனைவியின் கதை.

பெண்கள் தாசியைப்போல புருஷனுக்கு இன்பந்த வேண்டும்.

கற்புடைய பெண்களின் குணங்கள்.

பெண்களுக்குக் கற்பைத்தவிர மேலானது ஒன்றுமில்லை.

பெண்கள் மந்திரியைப்போல சமயமறிந்து புருஷனுக்கு வேண்டிய ஆலோசனைகளைச் சொல்லவேண்டும்.

---

மயிலாப்பூர் டிரேடிங் கம்பெனி,

மயிலாப்பூர் போஸ்டு, மதராஸ்.